# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



"மோடியையும் எதிர்ப்பேன்"

KALKI • 10.05.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

- ஜோலக்கடி அழகிரி டோக்கன் வருது பிடிபிடி!
- பெய்யுமா பணமழை? - அரக்கோணம் அலசல்
- வாயா, ராயா, வோட்டைப் போடுய்யா! - கேன்வாஸ் பண்ணும் நரிக்குறவர்கள்!




## சக்ஸஸ் ஸ்டார்
## சந்திப்பு!

**பரிசுகள் ரூ.1.500/-**

## பாலிடிக்ஸ் போட்டி - 4




இங்கே முகம் மறைக்கப்பட்டுள்ள அரசியல்வாதிகளைச் சுலபமாக அடையாளம் கண்டுபிடித்துவிடுவீர்கள். அவர்களுடைய நிஜமுகங்கள்தான் தெரியுமே! உரிய எண்களுக்கு எதிரே அவர்களது பெயர்களை எழுதுங்கள்.

தமது கர்மபூமியில் போட்டியிடுவதாகச் சொல்கிறார் ஒரு கலகல வேட்பாளர். இவர் படம் இதே இதழில் வேறொரு பக்கத்தில் உள்ளது. கண்டுபிடித்து, கத்தரித்து கீழேயுள்ள வெற்றிடத்தில் ஒட்டி, அவரைப் பற்றி நறுக்கென்று இரு வரி பாராட்டுக் குறள் எழுதி, கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். சரியான விடை எழுதும் ஐந்து பேருக்குக் குலுக்கல் முறையில் தலா ரூ. 100 பரிசு. மிகச் சிறந்த பாராட்டுக் குறள் எழுதும் ஒருவருக்கு ரூ. 1000/- சிறப்புப் பரிசு! கடைசி தேதி: 15.05.2009. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.




# நிஜமுகங்கள் தெரியுமா?




1. ........................................ 2. ........................................

3. ........................................ 4. ........................................

5. ........................................

உறைமீது பாலிடிக்ஸ் போட்டி - 4 என்று மறவாமல் குறிப்பிடவும்.




**பாராட்டுக் குறள்:**

என் பெயர் : ........................................

விலாசம் : ........................................

........................................

........................................

கல்கியில் விரும்பி வாசிப்பது:

........................................



● குலசை க.மீ நஜ்முதீன், காயல்பட்டினம்

**கள்வன் - கயவன் என்ன வேறுபாடு..?**

உள்ளம் கவர் கள்வன். உடல் கவர் கயவன்!

● உமா சுதர்ஸன், வேலூர்

**கிரேஸி, அக்ஷய திருதியைக்கு ஆத்துக்காரிக்கு என்ன வாங்கினீங்க?**

காதுல போட்டுக்க தோடு கேட்டாள். நான் காதுல போட்டுக்காம கம்முனு இருந்துட்டேன். அக்ஷய திருதியைக்கு எதுவும் வாங்காததால் ஆத்துக்காரியிடம் திட்டு வாங்கினேன்.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**அம்பிகாபதி-அமராவதி, சலீம்-அனார்கலி, லைலா-மஜ்னு, ரோமியோ-ஜூலியட். தங்களைக் கவர்ந்த காதல் ஜோடி?**

எனக்குக் காமெடிதான் பிடிக்கும். நீங்கள் சொன்ன நாலு ஜோடியும் டிராஜடியில் முடிந்த டிரா'ஜோடி'கள்.



# டிராஜடியில் முடிந்த டிரா

● லலிதா செல்லப்பா, சென்னை

**''வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்''... வல்லமை இல்லாதவர்களுக்கு....?**

'புதர்'. ஒளிந்து மறைந்து கொள்ள 'கேடயம்'..!

● பா.அசோக், விருதுநகர்

**'காதல்' - நேற்று...இன்று... நாளை...?**

நேற்று காத்திருத்தல். இன்று காதல்; நாளை கல் (ஆனாலும் கணவன்)...!

● ரமாமணி, சிதம்பரம்

**கொடுத்த வாக்கு தவறலாமா?**

கொடுக்கப்பட்ட வாக்கைத் தவற விடாதீங்க!

● பவானி கிருஷ்ணா, பெங்களூர்

**இப்போதெல்லாம் உபன்யாசங்களுக்கு கும்பல் குறைந்து விட்டதே?**

'எங்கெல்லாம் ராமாயணம் உபன்யாசம் நடக்கிறதோ, அங்கெல்லாம் தான் இருப்பதாகச் சொன்ன' ஆஞ்சநேய ஸ்வாமிகளே, 'விசாகா ஹரி'யின் சுந்தர காண்ட உபன்யாசத்தின் போது ஆடியன்ஸோடு அமர இடம் கிடைக்காமல், மேடையேறி 'விசாக ஹரி'யின் வாக்கில் அமர்ந்ததை அடியேன்



காதால் கண்டேன்.

● அ.முரளீதரன், மதுரை

**நாத்திகம், ஆத்திகம் இந்த இரண்டில் சிந்திக்க வைப்பது எது?**

கடவுள் இல்லை என்று சொல்லி சிந்திக்க வைப்பது நாத்திகம்; உண்டு என்று நம்பி கடவுளைச் சந்திக்க வைப்பது ஆத்திகம்.

● பி.இந்து அழகேஷ், கள்ளக் குறிச்சி

**நகைச்சுவை இல்லாத வாழ்க்கை எப்படி இருக்கும்?**

சிரிப்பாய் சிரிக்கும்!

● பா.அசோக், விருதுநகர்

**ஒருவன் வெற்றிக்குக் காரணம்?**

நிச்சயம் அவனல்ல. மற்றொருவனின் தோல்வி!

● என்.சண்முகம், திருவண்ணாமலை

**உங்களின் பலம் மனைவியா? மக்களா?**

மக்களைப் பெற்ற மகராசி!

● வஸந்தா ராஜகோபாலன், தாம்பரம்

**அரசருக்கு அரசி, ராஜாவுக்கு ராணி என்றால், மன்னருக்குப் பெண்பால் 'மன்னி' என்றல்லவா இருக்க வேண்டும்?**

சாரி பதில் தெரியவில்லை... என்னை 'மன்னி'...!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

# ஜோடிகள்!

**மா, பலா, வாழை முக்கனிகளில் எது சிறந்தது....?**

நாம் நல்லபடியாக வாழ ஏதாவது ஒரு பழம் தினமும் சாப்பிடுவது நல்லது. நம்மை வாழ வைக்கும் பழம் வாழைப்பழம்! வாழைப்பழம் சாப்பிட்டால் பலனும் அதிகம், பலமும் அதிகம். மா BALA and மா PALA வாழைதான்!

● சிவநேசன், டெல்லி

**அன்புத் தொல்லையால் என்ன ஆகும்?**

அன்புக்கு இல்லை அடைக்கும் தாழ். தொல்லைக்கு உண்டு தொலைந்த சாவி.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன், பா.கோபால்
தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல் : 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.







• பவானி சேஷாத்ரி

• ச.ஆ.கேசவன்

• அலமேலு ராஜகோபால்



# சக்ஸஸ் ஸ்டார் ‘சடார்’ சந்திப்பு!

அடையாறுக்கும், தி.நகருக்கும் இடையில் உள்ள தூரம் பத்து அடிதான். மௌண்ட் ரோட்டுக்கும் கிண்டிக்கும் கிட்டத்தட்ட கூப்பிடும் தூரம். திருவல்லிக்கேணியில ஆட்டோ ஸ்டார்ட் பண்ணி அடுத்த ஐந்தாவது நிமிஷத்துல மயிலாப்பூர்ல நிறுத்த முடியுமா... ஏவி.எம். ஸ்டுடியோவுல ‘வேட்டைக்காரன்’ படப்பிடிப்புத் தளத்துக்குப் போனா இதெல்லாம் சாத்தியம்தான். கல்கி நடத்திய விஜய் வின்னர்ஸ் போட்டில வின் பண்ணின ஐந்து கல்கி வாசகர்களோட போனப்ப



✱ வி.சி.வெங்கடேஷ் ✱ பா.து.பிரகாஷ்

# விஜய் வின்னர்ஸ்!

தான் இந்த ரகளை அரங்கேறுச்சு.

விறுவிறுவென எதிரிகளை வேட்டையாடிக் கொண்டிருந்த விஜய்யை ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்த வாசகர்கள், தங்களுக்குள் அவரிடம் கேட்க வேண்டிய கேள்விகளை விவாதித்துக் கொண்டிருக்கும்போதே, நாம் வந்திருக்கும் தகவல் அறிந்து நம்மைத் தேடிவந்தார் விஜய். அதிக வியர்வையோடும்... தேவையான பணிவோடும்... உதட்டுக்குள் ஒளிந்திருக்கும் சிரிப்போடும்... அதுவரைக்கும் கட்டுக்குள் இருந்த வாசகர்களின் உற்சாகம் விஜய்யைக் கண்டதும் விஸ்வரூபம் எடுத்தது.

இனி விஜய்யோடு வாசகர்கள்...

முதல் கேள்வி கேட்டார் 72 வயதான இளைஞர், இனாம்மணியாச்சி ச.ஆ.கேசவன். ''எனக்கு நயன்தாராவைப் பிடிக்கும். உங்களுக்கு?'' என்று எதிர்பாராத கேள்வியோடு எகிற கொஞ்சம் டரியலானார் விஜய். ''அண்ணா... நமக்கு எல்லாரையும் பிடிக்கும். குறிப்பா உங்களை மாதிரி குசும்புக்கார பார்ட்டியை ரொம்பப் பிடிக்கும்'' என்று சொல்லி கண்டத்திலிருந்து தப்பித்தார்.

''அதென்ன வேட்டைக்காரன்னு எம்.ஜி.ஆர். படத்தோட டைட்டில்?'' - இது தஞ்சாவூர் பா.து.பிரகாஷ்.

''எனக்கு வாத்தியார் படமும், சூப்பர் ஸ்டார் படமும் உசிருங்க. என்னோட ஓய்வு நேரங்கள்ல எம்.ஜி.ஆர். படம் பார்ப்பேன்; இல்லை ரஜினி ஸ்டைலை ரசிப்பேன். மத்தபடி படத்துக்குப் பேர் வெச்சது டைரக்டர்தான். நான் இல்ல!''

''எம்.ஜி.ஆர். போல அரசியலுக்கு வருவீங்களா?'' மேற்கு மாம்பலம் அலமேலு ராஜகோபால் கேட்க, விஜய்யிடமிருந்து நிதானமா பதில் வருது.

''அரசியலைத் தள்ளி நின்னு பார்க்கற அளவுக்கு எனக்கு இப்ப பக்குவம் வந்

திருக்கு!''

''அப்ப பார்லிமெண்ட் எலெக்ஷன்ல யாருக்கு உங்க வோட்டு?'' என்று திருச்சி வி.சி.வெங்கடேஷ் கொக்கி போட, ''அது மட்டும் ரகசியம்ங்க. ஆனால், ஒண்ணு மக்களுக்கு நல்லது பண்ணுறவங் களுக்குதான் வோட்டு!'' என்று சொல்லிவிட்டு, ''ஏனுங்கண்ணா என்னைச் சிக்கல்ல மாட்டிவிடறீங்க'' என்று கண்சிமிட்டிக் கெஞ்சினார்.



பேசாமலே இருந்த பவானி சேஷாத்ரி, பட்டுன்னு ஒரு கேள்வி கேட்டார்! ''நீங்க சைவமா.. அசைவமா?''

''சாப்பாட்டு விஷயத்துல மட்டும்தாங்க நான் சைவத்துக்கு மாறிக்கிட்டு இருக்கேன். மத்தபடி படங்கள்ல அடிதடி, கரம் மசாலா கலந்த அசைவம்தான் எனக்குப் பிடிக்கும்!'' என்று சொல்ல, டைரக்டர், ''ஸார் அடுத்த ஷாட் ரெடி'' என்று காது கடித்தார். கேமரா கிரேன் விஜய்யைச் கட்டுத்தள்ள ரெடியாக, ''விஜய் ஸார்...'' என்று இழுவையில் ஆரம்பித்தார்

**“அரசியலைத் தள்ளி நின்று பார்க்கிற அளவுக்குப் பக்குவம் வந்திருக்கு!”**

கேசவன், ''சொல்லுங்க'' என்று விஜய் காது கொடுக்க, ''நயன்தாராவைத் தொட்டு நடிச்ச கையால எங்களையும் தொட்டுப் பேசுனீங்களே... ரொம்ப சந்தோஷங்க..'' என்று சிவாஜி ஸ்டைலில் இழுக்க... ''அய்யோ... பார்ட்டி அடங்க மாட்டேங்குதே...'' என்று விஜய் அலற... ஷூட்டிங் ஸ்பாட்டே அலப்பறையில் அதகளமானது. கடைசியில் விஜய் வின்னர்ஸ் போட்டியில ஜெயித்த இந்த ஐந்து பேருக்கும் மொபைல் ஃபோன்களைப் பரிசாகக் கொடுக்க, வாங்கியவர் கள் முகத்தில் டன் கணக்கில் சந்தோஷம். ''ஷாட் ரெடி'' என்று டைரக்டர் சொல்ல, எதிரிகளை வேட்டையாடி விளையாட ஓடினார் விஜய்!

– மகிமைராஜன்

---

**ரீடர்ஸ் வாய்ஸ்**

**சிம்மவாஹினி :** சினிமாவுக்கு ஒரு எம்.ஜி.ஆர். போதும். விஜய் அரசியலுக்கு வர்றது எனக்குப் பிடிக்கல. பார்க்க பழக சொந்தக்கார பையன் மாதிரி இருக்கும் விஜய் அரசியலுக்கு வந்து அசிங்கப்பட வேண்டாம்.

**ராகேஷ் கண்ணா :** விஜய் படத்தைவிட அவருடைய லைஃப் ரொம்பப் பிடிக்கும். ப்ளஸும் மைனஸும் அவருக்கு கமர்ஷியல் படம்தான்.

**ஸ்ரீராம் :** வேற யாருடைய படத்தையும் பார்க்கமாட்டேன். விஜய் படத்தை 10 முறை பார்ப்பேன். அதுக்குள் அவரோட அடுத்த படம் வந்துடும். அரசியலுக்கு அவர் வரணும். அவர் ஒரு குட்டி எம்.ஜி.ஆர்.

கோயில் நகரமாம் "குடந்தை" மாநகரில்
ஆர்ப்பரித்து ஓடும் காவிரி நதிக்கரையில்
அமைய இருக்கும்

# "CAUVERY VIEW" Apartments

மக்களின் நன்மதிப்பை பெற்றுள்ள

**BEST**

நிறுவனத்தினரால் வெகு வேகமாக கட்டப்பட்டு வருகின்றது




* ஒன்று மற்றும் இரண்டு படுக்கை அறைகள் கொண்ட
வீடுகள் மிக நேர்த்தியான முறையில் கட்டப்பட்டு வருகின்றது.

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்க

## BEST HOUSING

A Unit of Best Group of Companies
70/114, 5th Street, Padmanaba Nagar, Adyar, Chennai - 600 020.

**S. Ramani** 98400 71735
**R. Venkatachalam** 98408 15931
**R. Devaraj** 98408 55522

*Conditions Apply

**'பாண்டவர் பூமி', 'ஜனனம்' திரைப் படங்களின் மூலமாக சினிமா வெளிச் சத்துக்கு வந்தவர் அருண் விஜய். தற்போது வெதர் டச் எண்டர்டெயின் மென்ட் தயாரிக்கும் 'மலை மலை' படத்தில் நடித்து வருகிறார். அவருடனான ஒரு சந்திப்பில்...**

### மூன்றாவது சஸ்பென்ஸ்

இது ஒரு ஜனரஞ்சகமான படம். சேரன் சார் மூலமாகத்தான் சினிமாவுல எனக்கு ஒரு திருப்புமுனை கிடைச்சது. அதற்கப் புறம் இந்தப் படம்ன்னு சொல்லுவேன். என்னோட லைஃப் கேரியர்ல இந்தப் படம் முக்கியமான ஒண்ணா நிச்சயம் இருக்கும். படம் முதல் பாதி பழனியிலும், பின்பாதி சென்னையிலுமாக எடுக்கப் பட்டிருக்கு. இதுல நான் மூன்று கெட் டப்புக்களில் வர்றேன்.

பழனியைச் சுற்றியுள்ள கிராமத்தில் வாழுகிற வேன் டிரைவராக ஒரு கதா பாத்திரத்திலேயும், சென்னையில் கூரியர் ஆபிஸ்ல வேலை பார்க்கிற ஒருத்த னாகவும் நடிச்சி ருக்கேன். மூணாவது சஸ்பென்ஸ்!

### தன்னம்பிக்கையுள்ள இயக்குநர்!

எதிர்பார்க்காமலேயே சில நல்ல விஷ யங்கள் நம்ம வாழ்க்கையில் அமைஞ் சிடும் இல்லையா! அப்படித்தான் எனக்கும் ஒரு நல்ல டைரக்டர் கிடைச்சிருக்கார்... வெங்கடேஷ் சாரோட ஸ்டைல் பிடிச்சி ருந்தது. அவர் ஆர்ட்டிஸ்ட்கிட்ட வேலை வாங்கற விதம், ஸ்பாட்ல ஸீன் பேப்பர்ல இல்லாததைக் கூட சிறப்பா எடுக்கிற திற மைன்னு நிறையச் சொல்லலாம்... அவ ருக்கு எது தேவையோ அதை சரியா எங்ககிட்டேயிருந்து வாங்கிடுவாரு... இப்போ என்னோட வளர்ச்சிக்கு உழைக்கிற தன்னம்பிக்கையுள்ள இயக்குர் அவர்.

'சூப்பர் சோனிக்' என்கிற வகையான கேமிரா இரண்டைப் பயன்படுத்தி படத்

# "பூப்பறிக்க

தோட சண்டைக்காட்சிகளை ஷூட் பண்ணியிருக்கோம். நீண்ட இடைவெளிக் குப் பிறகு 'யு.எஸ்.'லேருந்து வந்து 'கஸ்தூரி' நடிச்சிருக்காங்க. அப்புறம் பாடல் காட்சிக்காக, மலேசியாவுல லங்கா




**ஸ்ரீ**பெரும்புதூர் தொகுதியில் போட்டியிடும் ஏ.கே.மூர்த்தியை Action king மூர்த்தி என்றுதான் சுவர் விளம்பரங்களில் எழுதி வைத்திருக்கிறார்கள். மாடம்பாக்கம் பகுதியில் வோட்டு கேட்டு அவர் பிரசாரம் செய்யும்போது, அந்தப் பகுதியில் வசிக்கும் நரிக்குறவர்கள் சிலர், அவருக்கு வரவேற்பு கொடுத்தார்கள். நிறைய பாசிமணி மாலைகளை அவர்கள் அன்பளிப்பாக வழங்க, அவற்றை வாங்கிக் கழுத்தில் போட்டுக் கொண்டார் மூர்த்தி, ''என்னை எதிர்த்துப் போட்டியிடும் டி.ஆர்.பாலு கப்பல் அதிபர். நான் சாமானியன். அவரளவுக்கு... ஏன் அதில் பத்து சதவிகிதம் கூட என்னால் செலவு செய்ய முடியாது. எனவே ஒவ்வொரு ரூபாயும் முக்கியம்'' என்றவர், தேர்தல் நிதிக்காக பாசிமணி மாலைகளை ஏலம் விட்டு ஐந்நூறு ரூபாய் சேர்த்து விட்டார். டி.ஆர்.பாலுவின் பந்தாவான பிரசாரம் தொகுதி மக்களை முகம் சுளிக்க வைக்க, மூர்த்தியின் எளிய, இனிய அணுகுமுறை எல்லோரையும் கவர்கிறது.

- கௌசி

என்கிற இடத்தில இரண்டு கப்பல்களை எடுத்துக்கிட்டு படப்பிடிப்பு நடத்தினோம். அது நிச்சயம் ஆடியன்ஸ் கிட்ட பிரமிப்பை ஏற்படுத்தும்.

**'பூப்பறிக்கச் சொல்லி**
**பூவா கேட்டுக் கொள்ளும்**
**நீ பறித்துக் கொண்டால்**
**வேண்டாம் என்றா சொல்லும்'**

- என கவிஞர் வாலி எழுதிய பாட்டும், பட்டுக்கோட்டை பிரபாகரோட வசனமும் படத்தோட ஸ்பெஷாலிட்டி!

**எல்லாம் காதல் மயம்!**

இன்னிக்கு இருக்கிற ஆடியன்ஸ் வித்தியாசமான கதைகளைத் தேடி, சினிமா பார்க்க வர்றாங்க. கதை சொல்லும் விதத்தில்தான் படம் வேறுபடுதே ஒழிய, மற்றபடி எல்லாமே காதல் கதைதானே! ஆரோக்கியமான சூழல்தான் இப்போ!

# வருகிறேன்''



**தயாரிப்பாளர் மாமா?**

ரொம்ப நாளா வியாபாரம்தான் அவங்க தொழிலே. இப்ப சினிமா தயாரிக்க வந்திருக்காங்க! தொடர்ந்து படம் தயாரிக்கிற திட்டம் இருக்கு. என்னோட மாப்ளே 'ஹேமந்த்'தான்

## அருண் விஜய் பேட்டி

படத்தோட எக்ஸிக்யூட்டிவ் புரொடியூசர். குடும்பமா சேர்ந்து வெற்றிக்காகப் பாடுபடறோம். படம் பார்த்துட்டுச் சொல்லுங்க.

**- கிராபியென் ப்ளாக்**

**இசைமேதை எஸ். ராஜத்துக்கு வயது 90. அவரது சிஷ்யர்கள் விழா எடுத்துக் கொண்டாடியிருக்கும் இந்தச் சமயத்தில் அந்த ஆளுமையைச் சந்திக்க மைலாப்பூரிலுள்ள அவரின் இல்லத்துக்குப் பயணமானோம்.**

**வீ**ட்டின் சூழலும் அந்தக் காலத்துப் பொருட்களும் ஒன்றியைந்து, தூசியோடு பழைமையையும் சேர்த்து தன் மீது போர்த்திக்கொண்டு ஒரு பிளாக் அன்ட் ஒயிட் படம் போல இருந்தது. யாரும் நெருங்கத் தயங்கும் விவாதி ராகங்களைப்* பிரபலப்படுத்துவதில் அலாதி பிரியரான ராஜம், பல்கலைக்கழகத்தில் இசை பயிலும் மாணவர்களுக்கும் தமது சிஷ்யர்களுக்கும் அவற்றைக் கூடத்தில் கம்பீரமாய் அமர்ந்தபடி கற்றுத் தருவதும், கூட்டாக அவர்கள் பாடுவதும், பாரம்பரிய இழைகளால் நெய்த பரவசம்.

இசையையும் ஓவியத்தையும் தனது இரு கண்களாக பாவிக்கும் எஸ். ராஜம் சென்னை ஓவியக் கல்லூரியில் (சித்திர வேலை வித்யாசாலை) ஆறு ஆண்டு காலப் படிப்பை ஐந்தே ஆண்டுகளில் முடித்து, முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றவர்.

# இசையைக் குழைக்கும் தூரிகை!

**"பா**டகனுக்குப் பாட்டு மட்டும் தெரிந்தால் போதும். மரபுசார்ந்த ஓவியனுக்கு நிச்சயம் பாட்டு தெரிந்தே இருக்க வேண்டும்" என்கிறார் ராஜம். இன்றும் நான்கு மணி நேரம் தூரிகையோடு உறவாடும் பிஸியான ஓவியர். 'கர்னாடக இசையை அப்பா சுந்தரம் அய்யரிடமிருந்தும் ஓவியத்தை அம்மாவிடமிருந்தும் கற்றதாகச் சொல்லும் அவரிடம் 'அம்மா ஓவியரா?' என்றால்... "அதெல்லாம் இல்லை. அம்மா போடும் கோலத்தின் கோடுகளும் சமையலறையில் மஞ்சள் நிற பருப்பு, சிவப்பு மிளகாய், கருத்த புளி என வரிசையாய் அவள் அடுக்கியிருக்கும் வண்ணங்களின் நேர்த்தியும் என்னை ஓவியனாக்கின" என்கிற பதில் நம் புருவத்தை வில்லென வளைக்கிறது. 1930களில் டாக்கிகளில் நடித்துள்ளார். வீணை மேதை எஸ். பாலசந்தர் இவருடைய சகோதரர்.

"ஓவியம் என்பது இயற்கையைப் பிரதிபலிப்பதாக இருக்கலாமே தவிர, பிரதி எடுப்பதாக இருக்கக்கூடாது. ஒரு வானத்தை, மரத்தை, அசலாக அப்படியே வரைய வேண்டிய அவசியமில்லை" என்பது ராஜத்தின் கருத்து. "மாடர்ன் ஆர்ட் எனக்குப் பிடிக்காது. அவங்க யோசிச்ச



* இவை செவிக்கு அன்னியமாகத் தோன்றக்கூடிய மாறுபட்ட அமைப்புடைய ராகங்கள்.

படம் போடுறாங்களா... இல்ல படத்தைப் போட்டுட்டு அதுக்கு விளக்கம் யோசிப்பாங்களான்னு ஒரு சந்தேகம் உண்டு'' என்று அவர் முளைக்க வைக்கும் சந்தேகக் கொடி, நமக்குள்ளும் படர ஆரம்பிக்கிறது!

''ஓவியன் தன்னைத் தெரிந்துகொள்ளும்போது கலைஞனாகிறான். பெயின்டிங் என்பதே ஒரு சஜெஷன் தானே? எனக்கு ஆத்மதிருப்தி நிறைய தந்தது. சங்கீத



கே:பாரதி

மூர்த்திகளுக்கு முதன்முறையா ரூபம் கொடுத்ததுதான்'' - என்று பன்னிரண்டு சூரியனும் ஒளிர்ந்த முகமாய்ப் பிரகாசிக்கிறார். ''எதன் அடிப்படையில்? எப்படி யூகித்து வரைந்தீர்கள்?'' என்றால்...

''எனக்குக் கிடைத்த தகவல், ஆதாரம் மட்டுமன்றி அவர்களின் பாடல்கள் மூலம் வெளிப்பட்ட இயல்புகள். - இவையெல்லாம்தான் ரூபத்துக்கான சாட்சியங்கள். மேலும் தரிசிப்பதற்கும் வணங்குவதற்குமான தேஜஸை கற்பனையில் குழைத்தேன். தியாகராஜர் கையில் இருந்த ருத்ராட்ச மாலையை துளசி மணியாக மாற்றினேன் - ராம பக்தர் என்பதால். ஷ்யாமா சாஸ்திரி வெற்றிலை போடும் பழக்க முள்ளவர். அவர் அருகே வெற்றிலைப் பெட்டி இடம்பெறச் செய்தேன். ஷ்யாமா சாஸ்திரி பூஜை பண்றவர். கோபமும் அதிகம். அதனால் அவர் நிறத்தைக் கொஞ்சம் மட்டுப்படுத்தினேன்'' என்றபடி அவரின் உதடு ஒரு தியாகராஜ கீர்த்தனையைப் பாடத் துவங்கி விட்டது.

''அஜந்தா ஓவியத்தை நேரில் பாத்துட்டு மூணு மாசம் படம் போடாம கிடந்தேன். அந்தப் பிரம்மாண்டத்தின் முன் என்னை ஒரு தூசாக நெனைச்சேன்'' என்று ஞான அடக்கம் காட்டும் ராஜம், வாட்டர் கலரைப் பயன்படுத்தி, மெல்லிய வண்ணங்களைக் கரைத்துக்கொண்டு அடுக்கடுக்காகத் தீட்டுவதும், பிறகு அதைக் குழாய் நீரில் கழுவிக் காயவைப்பதுமான நூதன முறை மூலம் சித்திரலேகா பாணி



● இசை மேதை ராஜத்தின் கைவண்ணத்தில் சங்கீத மும்மூர்த்திகள்...

**❛❛அங்கீகாரத்தை உத்தேசிக்கிறவன் கலைஞன் இல்லை❜❜**

ஓவியங்களை வரைகிறார். ''உங்களுக்கான அங்கீகாரம் கிடைத்ததா?'' என்றால்,

''இசையும் ஓவியமும் எனது கடமைகள். கடமையைச் செய்யும் போது எதிர்பார்ப்பும் ஏக்கமும் எப்படி வரும்? அங்கீகாரத்தை உத்தேசிக்கிறவன் கலைஞன் இல்லை'' என காட்டமாகும் பாரம்பரியப் பிரியரான ராஜம், சரியான சாப்பாட்டு ருசிகரும்கூட. தம் டேபிளில் சின்னச்சின்ன பாட்டில்களில் வகை வகையான நொறுக்குத் தீனிகளைப் போட்டு வைத்திருக்கிறார். ஒரு குழந்தையைப் போல தம்மைப் பார்க்க வரும் குழந்தைகளுக்கு கலர் பென்சில், பிரஷ் என்று சிறு பரிசு தந்து அனுப்புவார்! ●

## சீஸன் சினிமா




**அரசியல் தலைவர்களுக்குப் பிடித்த சினிமா எது தெரியுமா?**

சிரஞ்சீவி-இரயில் பயணங்களில்

லாலு பிரசாத் யாதவ் - மாட்டுக்கார வேலன்

அழகிரி - தென் பாண்டி சிங்கம்



விஜயகாந்த் - கேப்டன் பிரபாகரன்

வருண்காந்தி - தாய் சொல்லைத் தட்டாதே

ராகுல் காந்தி - பங்காளி

நல்லகண்ணு - வறுமையின் நிறம் சிவப்பு

ராமதாஸ் - திசை மாறிய பறவைகள்

ஜெயலலிதா - அன்னை பராசக்தி

மன்மோகன் சிங் - பொம்மை

தயாநிதி மாறன் - பாசப் பறவைகள்

வைகோ - வாழ்வே மாயம்

**- என். சீத்தாலட்சுமி**

ப்ரம்மசக்தி துணை


ஸ்ரீ பால கணபதி


ஸ்ரீ பால முருகன்


ஸ்ரீ ப்ரத்யங்கிராதேவி


ஸ்ரீ சக்ரம்


ஸ்ரீ வாராஹி தேவி


ஸ்ரீ விஸ்வரூப ஆஞ்சநேயர்

# அருள்மிகு ப்ரம்மசக்தி ஆலயம்

## (Brahmma Sakthi Temple Trust)

நெ.174பி, 3-வது குறுக்குத் தெரு, சதாசிவநகர், மடிப்பாக்கம், சென்னை 600 091.
போன்: 91 44 2258 1572, செல்: 98843 57823, 98841 60092

சென்னை மடிப்பாக்கம் சதாசிவ நகரில் ஆரவாரமில்லாமல் அமைதியாய் அமைந்து தன்னை தேடிவரும் பக்தர்களுக்கு மகிழ்வையும், மனநிறைவையும், நிம்மதியையும், தெளிந்த சிந்தனையையும், குறைவில்லா வாழ்வையும் வரப்பிரசாதமாய் வாரி வழங்கும் திருக்கோயில் ஸ்ரீ ப்ரம்மசக்தி ஆலயம்.



சுயம்புவான புற்றின்மேல் அமைந்த இவ்வாலயம் நாக தலையுடன் பெண் உருவில் முகப்பு வாயிலுடனும் புத்த கயா போன்ற கூம்பு வடிவத்தில் சப்தமாதாக்கள் சூழ கோபுரத்துடனும் அமைந்துள்ளது.

முக்கண்ணுடன் சிவஸ்வரூபமாய் சின்முத்திரையுடன் மூஷிகவாகனத்தில் பால கணபதியும், கையில் நாகத்துடன் சம்ஹார மூர்த்தி யாய் குக்குடவாஹனத்தில் பால முருகனும், சந்தான பாக்கியம் தரும் ப்ரதான தேவதையான ஸ்ரீ பாலா திரிபுரசுந்தரி சந்தான பகவதி என்ற நாமத்துடன் குழந்தை வடிவிலும், காளி, லட்சுமி, சரஸ்வதி ஸ்வரூப மஹிஷவாஹனத்தில் ஸ்ரீ வாராஹியும், அதர்வண பத்ரகாளி ஸ்ரீ ப்ரத்யங்கிரா சிம்ஹ வாஹனத்திலும் மற்றும் ஸ்ரீ யந்த்ரமும், சங்கு சக்கரத்துடன் விஷ்ணு ரூபமாய் த்யான நிலையில் இருக்கும் விஸ்வரூப ஆஞ்சநேயரும், திரிசூல ரூபத்தில் சூலினி துர்க்கையும், இவ்வாலயத்தில் அமைந்துள்ள மூர்த்தங்கள் ஆகும்.

இவ்வாலயத்தில் அருள்வாக்கு அருளிவரும் ஸ்ரீ பாலா அம்மா தன்னிடமுள்ள அற்புத சக்தியை வியாபாரமாக்காமல் துன்பத்தில் இருப்பவரின் கண்ணீரை துடைக்கும் சேவையாகவே செய்துவருவதால் இங்கு அருள்வாக்கு பலிதம் என்பது தெள்ளத்தெளிவு.

எல்லோரும் ஒருசேரக் கைவிட்டாலும் இல்லை எனச் சொல்லி கைகழுவி விட்டாலும் என் பிஞ்சுக் கைகள் உன் கை பற்றும் கடைசி வரை உன்னை காப்பாற்றும் என்ற வாக்குப்படி ஸ்ரீ பாலா அம்மா பக்தர்களின் வாழ்வில் நிகழ்த்திவரும் அற்புதங்கள் ஏராளம்.

**அருள்வாக்கு நாட்கள்: திங்கள் முதல் வெள்ளிவரை; நேரம்: மாலை 6 முதல் 8.30 மணிவரை**

## இவ்வாலயத்தின் விசேஷ பூஜைகள்

### அமாவாசை ஹோமம்

**நாள்:** பிரதி அமாவாசை.

**மூர்த்தம்:** ஸ்ரீ ப்ரத்யங்கிரா.

**பூஜை:** மிளகாய் ஹோமம்.

**பலன்கள்:** மந்த்ர, யந்த்ர, தந்த்ர பாதிப்பு விலகுதல் ஏவல், பில்லி, சூனியம் விலகுதல், கோர்ட் விவகாரத்தில் வெற்றி, கணவன் மனைவி ஒற்றுமை.

**கட்டணம்:** ரூ.101/-
வெளிநாடுகளுக்கு US$6

### பௌர்ணமிஹோமம்

**நாள்:** பிரதிபௌர்ணமி.

**மூர்த்தம்:** சந்தான பகவதி.

**பூஜை:** ஸ்ரீ வித்யா ஹோமம்.
ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாம ஹோமம்.

**பலன்கள்:** குழந்தை பாக்கியம், கால சர்ப்ப தோஷ நிவர்த்தி, உத்யோக ப்ராப்தி, வெளியூர் உத்யோக ப்ராப்தி, விவாஹ ப்ராப்தி.

**கட்டணம்:** ரூ. 75/-
வெளிநாடுகளுக்கு US$6

### சித்ராபௌர்ணமி

8.5.09 அன்று சித்ரா பௌர்ணமியை முன்னிட்டு ஸ்ரீ பாலா அம்மாவை குருவாக ஏற்று பக்தர்கள் செய்யும் குருபூஜையும் அம்மா உருவில் இருக்கும் பாலா தன் சிஷ்யர்களுடன் கொஞ்சி விளையாடுவது எல்லாவற்றையும் மறந்த ஒரு பரவச நிலை மேலும் ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி ஸஹஸ்ரநாம அர்ச்சனையும், ஸ்ரீவித்யா ஹோமமும், அன்னதானமும் நடைபெறும். பக்தர்கள் அனைவரும் கலந்து கொண்டு அம்மாவின் நல்லாசியை பெறுங்கள்.

மேலும் சங்கடஹரசதுர்த்தி, சுக்லசஷ்டி, பஞ்சமி அஷ்டமி பூஜையும் சிறப்பாக நடைபெறுகிறது.
வாருங்கள்! ஸ்ரீ பாலா அம்மாவை தரிசியுங்கள்! எண்ணங்கள் நிறைவேறக் காணுங்கள்!

web: www.brahmmasakthitemple.org | E-mail: contactus@bramasakthitemple.org

**இம்மாதம் முதல் ஆலய திருப்பணி தொடங்க உள்ளது.**




# கல்கி



2009 மே 10
விரோதி சித்திரை 27
மலர் : 67
இதழ் : 41


**தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்**

## உண்ணாவிரதம் உஷரர்! உஷார்!

"தமிழ்நாட்டில் உள்ள எதிர்க்கட்சியினருக்கு, தேர்தல் களத்தில் பேசுவதற்கு எந்தப் பிரச்னையும் இல்லை. அதனால்தான் இலங்கைப் பிரச்னை பற்றி மட்டுமே பேசுகின்றனர்," என்பது முதல்வர் கருணாநிதியின் நிலைப்பாடு. யதார்த்த பிரச்னைகள் எவ்வளவு இருந்தாலும், அவற்றை மூடி மறைக்க, உணர்வு ரீதியான பிரச்னையைக் கையிலெடுப்பதுதான் இந்திய அரசியல்வாதியின் தனிப் பாணி என்பது முதல்வர் உள்பட தமிழ்நாட்டு அரசியல்வாதிகள் அனைவருக்கும் தெரியும். தமிழீழப் பிரச்னை பற்றி அதிகமாகப் பேசப்படுவதும் இதனால்தான். இந்திய நாட்டை அச்சுறுத்தி வருகிற யதார்த்த பிரச்னைகளை மறந்தும் மறைத்தும் வரும் அனைத்து அரசியல்வாதிகளுக்கும், இங்கே அவற்றுள் முக்கியமான சிலவற்றைப் பட்டியலிடுகிறோம்.

இந்தியா முழுவதுமே உள்ளதைப்போல் தமிழ்நாட்டிலும் உலகப் பொருளாதார நலிவின் கடும் பாதிப்பு நிலவுகிறது. ஆயிரக் கணக்கானோர் வேலையிழந்து திண்டாடுகிறார்கள். உடனே ஏதேனும் அவசரக்கால நடவடிக்கை எடுக்காவிட்டால், வேலையின்மை பிரச்னை மேலும் கடுமையாகி, பிச்சைக்காரர்களை உருவாக்கும் அபாயம்கூடத் தோன்றும். விலைவாசி உயர்வின் கடுமையினால், எவ்வளவு சம்பாதித்தாலும் போதவில்லை. குடும்பம் நடத்த நடுத்தரவர்க்கம் திணறுகிறது. இந்நிலையில் தனியார்துறையில் பலருக்குச் சம்பளக் குறைப்பும் நிகழ்ந்து, சவாலை அதிகரித்துள்ளது. பொருளாதார நிலை சீர்படவும் செழிக்கவும் மத்திய அரசு என்ன செய்யப் போகிறது? மத்திய அரசு விவசாயக் கடன்களைத் தள்ளுபடி செய்தும் விவசாயிகளின் நிலை உயரவில்லை. காவிரி நதி நீர்ப் பங்கீடு பிரச்னை போதாது என்று, முல்லைப் பெரியாறு, ஹொகேனக்கல் திட்டம், பாலாற்று அணை என்று பாசன/குடி நீர் பகிர்வு குறித்த சச்சரவுகள்தான் பெருகுகின்றனவே தவிர, விவசாய உற்பத்தி பெருகக் காணோம். தேசிய நெடுஞ்சாலைத் திட்டங்கள் வேகமிழந்துள்ளதால் போக்குவரத்துக்குப் பாதிப்பு; சரக்குகள் பரிவர்த்தனைக்குப் பாதிப்பு. ரயில்வே திட்டங்கள் பலவும் இதேபோல் மிகவும் தாமதமாகவே நிறைவேறி வருகின்றன. வடக்கிலும் வடகிழக்கிலும் மட்டுமின்றி, நாட்டின் தென் பகுதியிலும் சட்டம் - ஒழுங்கு சீரழிந்து வருவதால் பயங்கரவாதம் வேரூன்ற களமும் காலமும் கனிந்துள்ளன. தேசிய ஊரக வேலை வாய்ப்பு உத்தரவாத திட்டம் இங்கே எத்தனை பேருக்கு நிரந்தர வேலைகளை உருவாக்கியிருக்கிறது?

அடிப்படைச் சுகாதாரம், மருத்துவ வசதி, கழிப்பறை வசதி போன்றவற்றைக்கூட முழுமையாகத் தரவியலாத நிலைமை நீடிக்கிறது. ஊட்டச் சத்து இன்மை, பெண் சிசுக் கொலை, பெண் கல்வி மறுப்பு போன்றவை இன்னமும் வெற்றி கொள்ளப்படவில்லை. இவ்வாறு, இந்த தேசத்துக்கே உரித்தான ஏராளப் பிரச்னைகள் இன்னமும் தீர்க்கப்படாமலே இருக்கின்றன. இத்தனை பிரச்னைகளையும் ஆளுங்கட்சியினரும் எதிர்க்கட்சியினரும் வேண்டுமானால் மறந்து போகலாம். ஆனால், வாக்காளர்களாவது இவற்றை மறக்காமல் இருக்கவேண்டும். ஆறு மணி நேர உண்ணாவிரதமோ, தனித் தமிழ் ஈழத்துக்கான ஆவேச ஆதரவோ தொலைக்காட்சியில் பார்க்க சுவாரஸ்யமாக இருக்கலாம். ஆனால், அவை ஈழத் தமிழர்களின் பிரச்னையையும் தீர்க்காது; இந்தியத் தமிழர்களின் வாழ்வையும் மேம்படுத்தாது!

இதில் மயங்கி ஏமாந்து போகாமல், தேசத்தில் நிலவும் முக்கிய பிரச்னைகளை எந்தக் கட்சி அல்லது கூட்டணியால் சமாளிக்க முடியும்; நாட்டின் வளர்ச்சி மூலம் தனி நபர் வளர்ச்சிக்கு எந்தக் கட்சி அல்லது கூட்டணி உதவ முடியும் என்பதைத்தான் வாக்காளர்கள் கவனமாக எடை போட வேண்டும். நல்லவர்களுக்கே வாக்களித்து நாடாளுமன்றத்தில் அமர்த்த வேண்டும்.

முதிர்ச்சியின்றி வெற்றொலி எழுப்புவோரைப் புறக்கணித்து, வலிமை மிக்க நல்லாட்சிக்கு வழிவகுக்கும் பொறுப்பு வாக்காளர்களுக்கு இருக்கிறது.

# அசைவற்ற மைக்குகள்!

கோவி.லெனின்

● தன் மீது
துப்பப்படும் எச்சிலுக்கு
எதிர்வினை ஆற்றாமல்
அசைவற்று இருக்கின்றன
மைக்குகள்;
மக்களைப் போலவே!

● தேர்தல் என்பது
ஜனநாயகத் திருவிழாவாம்.
ஒவ்வொரு திருவிழாவிலும்
தொலைந்து போகும்
குழந்தைகளாய்
வாக்காளர்கள்.



● கூட்டத்துக்கு 200
ஊர்வலத்துக்கு 500
வோட்டுக்கு 1000!
தாராள கூலி தரும்
தேர்தல் தொழில்.

● வாக்களிப்பது
மக்கள் கடமை.
வாக்குறுதி அளிப்பது மட்டுமே
அரசியல்வாதிகளின் கடமை.

● காந்தி நோட்டாலும்
பிராந்தி பாட்டிலாலும்
ஐந்தாண்டுக்கொரு முறை
பாதுகாக்கப்படுகிறது ஜனநாயகம்.

## அருள்வாக்கு

# தர்மம்

மனிதராகப் பிறந்த எல்லாருக்கும் பசி, தாகம் இருக்கிறது. அவர்கள் வசிக்க ஓரிடம் வேண்டியிருக்கிறது. குளிர், வெயிலிலிருந்து காப்பாற்றிக் கொள்ளவும், மானத்தை ரட்சித்துக் கொள்ளவும் ஆடை அணிய வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் மனிதன் வசதி செய்து கொள்ள வேண்டும். ஏதோ ஒரு தொழிலைச் செய்தே இதற்கு வசதி செய்து கொள்கிறான். அத்தியாவசியமான சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்வதோடு ஒவ்வொரு மனிதனும் பிறர் விஷயமாகச் சில கடமைகளை நிறைவேற்றவும் வேண்டியிருக்கிறது. ஒவ்வொருவனும் ஏதோ ஒரு குடும்பத்தில் பிறப்பதால் அந்தக் குடும்பத்தில் இருப்பவர்களுக்கும், பிற்பாடு கல்யாணமானதும் மனைவி மக்களுக்கும் பொறுப்பெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. தன்னுடைய சமுதாயம், தேசம் இவற்றுக்கெல்லாம் மனிதன் கடமை ஆற்ற வேண்டியிருக்கிறது. பலவிதத்தில் சுயதேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம்; பலவிதத்தில் வீடு, நாடு இவற்றுக்கான கடமைகளைச் செய்யலாம். ஆனால், மனத்துக்குத் தோன்றியபடியெல்லாம் இவற்றைச் செய்யாமல், எவருக்கும் தீங்கு விளைவிக்காத விதத்தில், அதீதமான காமமும் குரோதமும் கலக்காமல் செய்ய வேண்டும். தன்னையும் மேம்படுத்திக் கொண்டு, அனைவரையும் உயர்த்துகிற விதத்தில் தொழிலையும், கடமையையும் செய்ய முடியும். இவ்வாறு இக உலகக் காரியங்களை, சம்பந்தப்பட்ட அனைவரது ஆத்ம அபிவிருத்திக்கும் அனுசரணையாகச் செய்வதற்குத்தான் 'தர்மம்' என்று பெயர்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

# ஜகஜாலக்கேடி அழகிரி, டோக்கன் வருது பிடிபிடி!

அரசியல் நோக்கர்கள் என்றில்லை. தமிழக வாக்காளர்களின் ஒட்டுமொத்தப் பார்வையும் குவிந்துள்ளது மதுரை பாராளுமன்றத் தொகுதி மீது. 'அஞ்சா நெஞ்சர்' எதற்கெல்லாம் துணிவார்; அவர் ஸ்டைல் என்ன என்கிற குறுகுறுப்புத்தான்! இப்போதுதானே அவர் முதன்முறையாகத் தேர்தலில் போட்டியிடுகிறார்!

அவரைத் தோற்கடிக்க வேண்டுமென அ.தி.மு.க. கூட்டணியினர் வரிந்து கட்டிக் கொண்டு சுழல்கின்றனர். 'வேட்பாளராக முறைப்படி அறிவிப்பு வெளியான மறுநிமிடமே மூன்று லட்சம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெறுவேன்' எனச் சொன்னவர் அழகிரி.

''கடந்த மூன்று சட்டமன்ற இடைத்தேர்தல்களிலும் பணத்தைக் காட்டி தி.மு.க. கூட்டணிக்கு வெற்றியைத் தேடித் தந்தவர் அழகிரி. அதே ஃபார்முலாவைப் பயன்படுத்தி இப்போதும் வெற்றி பெற்று விடலாம் என மனக்கோட்டை கட்டியுள்ளார். அந்த மனக்கோட்டை மணல் கோட்டையாக சரிந்து போகும்!'' என்கிறார் ஃபோட்டோவுக்கு மறுத்து விட்ட அ.தி.மு.க. பிரமுகர்.



* பிரசாரத்தில் அழகிரி, ஸ்டாலின்



**யவனராணி, B.Sc., I Year**

**யாருக்கு வோட்டுனு போட்டுட்டு வந்து சொல்றேன். இப்ப நான் சொல்ல மாட்டேன். அது ரொம்ப சீக்ரெட்!**

தொகுதி மறுசீரமைப்பில் சிக்கி 'குண்டக்க மண்டக்க' ஆகாத தொகுதி இது. மதுரை கிழக்கு, மதுரை மேற்கு, மதுரை மத்தி, மதுரை தெற்கு, மதுரை வடக்கு, மேலூர் என ஆறு சட்டமன்றப் பகுதிகளை உள்ளடக்கியது மதுரை பாராளுமன்றத் தொகுதி.

மேலூர் பகுதியில் ஒரு கிராமம். மு.க. அழகிரியின் பிரசார வேன் ஊர்ந்து வந்து நிற்கிறது. மைக் பிடித்து சாதாரணமாகப் பேசுகிறார். சூழ்ந்துள்ளவர்களிடம் கேள்வி-பதில் பாணியில் உரையாடுகிறார். 'உங்களுக்கு என்ன வேண்டும்?' எனக் கேட்டு, 'என் அப்பாவிடம் வற்புறுத்திக் கேட்டுப் பெற்று உங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்வேன்!' எனப் பதிலளிக்கிறார் அழகிரி.

''ஒவ்வொரு கிராமத்திலும் பெண்கள் சும்மா வந்து, பூரண கும்பங்களும் குத்துவிளக்குகளும் ஏந்தி நிற்பதில்லை. டோக்கன் தருகிறார்கள். அழகிரி பக்கத்துக்கு கிராமத்துக்குப்






தேர்தல் இது. கடந்த இரண்டு பீரியடுகளில் மதுரையில் ஏற்கெனவே நிறைவேற்றப்பட்டுள்ள திட்டங்களை, இனிமேல் தான் எம்.பி. ஆகி செய்து தரப் போவதாக வாக்குறுதி தந்து பேசி வருகிறார் அழகிரி! இதுபோன்ற ஏமாற்று வார்த்தைகளுக்கு மதுரைவாசிகள் மயங்க மாட்டார்கள்!'' என்கிறார்.

''மயக்கற அளவுக்கெல்லாம் வார்த்தை ஜாலம் செய்து அண்ணனுக்குப் பேசத் தெரியாது. அது அவருக்கு அவசியமும் இல்லை. அ.தி.மு.க.தான் கூட்டணி பலம்னு சொல்லி வர்றாங்க. காங்கிரஸ் எதனோட கூட்டணி வைக்குதோ அதான் பலமான கூட்டணி. எஸ்மா, டெஸ்மா சட்டங்களைப் போட்டு தொழிலாளர்களை வாட்டி வதைத்த அ.தி.மு.க.வோடு கூட்டணி வைத்துள்ளது மார்க்சிஸ்ட்'' என்று சாடுகிறார். தி.மு.க.வின் மதுரை மத்திய தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கௌஸ் பாட்சா.

''எங்களுக்கு வெற்றியிலும் மமதை வந்ததில்லை. தோல்வியிலும் கௌரவம் இழந்ததில்லை. அரசியல் அராஜகம் பண்ணத் தெரியாத, அவற்றுக்குத் துணை போகாத நல்ல வேட்பாளரை, எளிய மனிதரை வெற்றி பெறச் செய்யாமல்




பிரசாரம் சென்ற பிறகு, முற்பட்ட கிராமத்தில் வரிசை கட்டி நின்ற பெண்களிடமிருந்து டோக்கன்கள் பெற்றுக் கொண்டு பணப் பட்டுவாடா செய்கின்றனர். டோக்கன் - பணப் பட்டுவாடா தற்போது சற்று கட்டுப்பட்டுள்ளது!'' என்கிறார் மார்க்சிஸ்ட் தோழர் ஒருவர்.

அ.தி.மு.க. கூட்டணியின் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர் மோகன். புதுப்பட்டி கிராமத்தில் வாக்கு சேகரிப்பில் இருந்தவரை நேரில் சந்தித்தோம். ''மதுரையில் அரசியல் அராஜகத்துக்கும், அரசியல் அமைதிக்கும் இடையே நடக்கும்



**கந்தர், BCA, II year**

**எங்க வயசுப் பசங்களும், பொண்ணுங்களும்தான் சரியா வோட்டுப் போடப் போக மாட்டாங்க. கள்ள வோட்டு அதனாலயும் அதிகமாகுது. என் வோட்டு '49 ஓ'வுக்கே.**



**மகேஸ்வரி, B.Com., DCA**

**மதுரையில் தொழில்துறை மீதான அரசியல் அச்சுறுத்தல் தொடர்ந்து நிலவி வருகிறது. அந்த அச்சுறுத்தல் அகற்றப்பட வேண்டும். அதை யார் செய்வார்களோ அவர்களுக்குத்தான் என் வோட்டு.**

இருந்தால், அது தொகுதி மக்களுக்குத்தான் பெருந் தீங்கு!'' என்கிறார் சி.பி.எம்.மின் தேர்தல் பொறுப்பாளர்களில் ஒருவரும், எழுத்தாளருமான சு.வெங்கடேசன்.

''மார்க்சிஸ்ட் வேட்பாளர் மோகன், தொடர்ந்து இரண்டு முறை எம்.பி.யாக வெற்றி பெற்றும் மதுரைக்குப் பெரிதாக ஏதும் செய்யவில்லை. பாரம்பரிய மில்கள் பலவும் இழுத்து மூடப்பட்டு, அந்த இடங்களில் தற்போது அடுக்கு மாடி வீடுகள் உருவாகி வருகின்றன. இதுதான் கம்யூனிஸ்ட் வேட்பாளரின் சாதனை. மதுரையில் அடாவடி அரசியலுக்கு முற்றுப்புள்ளி வைக்கவும், தி.மு.க. - அ.தி.மு.க. என மாறி மாறி முதுகில் ஏறிவரும் மார்க்சிஸ்ட் வேட்பாளருக்குப் பாடம் புகட்டவும் வாக்காளர்கள் தயாராகி விட்டனர்!'' என்று சந்தடி சாக்கில் சிந்து பாடி வாக்குகள் சேகரித்து வருகிறார் தே.மு.தி.க. வேட்பாளர் கவியரசு.

''தமிழகத்தில் தி.மு.க. ஆட்சிக் காலத்தில்தான் துவங்கப்பட்டன மகளிர் சுயஉதவிக் குழுக்கள். அவை இன்று பல்கிப் பெருகியுள்ளன. மதுரை மாநகராட்சி வாயிலாக மகளிர் சுயஉதவிக் குழுக்களுக்கு வங்கிக் கடன் உதவிகள் அதிக அளவு பெற்றுத் தரப்பட்டுள்ளன. மகளிர் சுயஉதவிக் குழுக்களின் பெரும்பாலான குடும்பங்களின் வாக்குகள் தி.மு.க.வுக்குத்தான்!'' என்கிறார் மதுரை மேலமாசி வீதியில் வசித்து வரும் சந்திரா முருகேசன்.

* சு.வெங்கடேசன்

**''கம்யூனிஸ்டுகளுக்கு அரசியல் அராஜகம் பண்ணத் தெரியாது''**

மாநகரப் பகுதிகளிலும், கிராமப் புறங்களிலும் பல்வேறுபட்ட வாக்காளர்களைச் சந்தித்தோம். ஒவ்வொரு மாநகரப் பகுதியிலும், ஒவ்வொரு கிராமத்திலும் வாக்காளர்கள் 'காத்திருக்கிறார்கள்' என்பதை அறிய முடிந்தது. அவர்கள் ஒவ்வொருவரும் 'மாலு' எப்ப வரும்? என்று நம்மிடமே கேட்டனர். ' 'மாலு' வந்தால்தான் வோட்டு!' என்கிற நிலை. இதிலும் யார் அதிகமாக 'மாலு' வெட்டுகிறாங்களோ அவர்களுக்கே எங்கள் வாக்கு என்று வெளிப்படையாகப் பேசுகிற போக்கு.

''வோட்டுக்குப் பணம் என்கிற அவலம், கடந்த முப்பது ஆண்டுகளாக வளர்ந்து வந்து விட்டது. வோட்டுக்குப் பணம் வாங்குவதில் என்ன தவறு என்று பெரும்பான்மையோர் எண்ணத் தொடங்கி விட்டனர். இது ஒரு மாபெரும் சீரழிவு. மதுரையில் எந்த வேட்பாளருக்குப் பணபலம் அதிகம் என்பதுதான் உலகத்துக்கே தெரியுமே!'' எனக்கூறி அதிர வைக்கிறார் நடுநிலையாளர் ஒருவர்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**✱ எந்த வேட்பாளருக்கும் வாக்களிக்க விருப்பமில்லையெனில், உங்களுடைய எதிர்ப்பு வோட்டை பதிவுசெய்வதுதான் '49 ஓ' இந்த முறையில் வோட்டு எந்திரத்தில் வோட்டு அளிக்க முடியாது. மாறாக, அதற்குரிய விண்ணப்பத்தில் பூர்த்தி செய்து கொடுக்கலாம்.**



# ஒரு முடிவின்

“மன்னிக்கு எப்பவுமே பிடிவாதம் ஜாஸ்தி'' சட்டென்று முகவாய்க் கட்டையில் இடித்துக் கொண்டாள் மாலதி. தன் அண்ணா மனைவியைப் பற்றிப் பேசிக் கொண்டே....

''நீதான் சொல்லேன் தீபா. உங்க அம்மாகிட்டே....'' தீபாவின் மாமியார் தீபாவை நோக்கிப் பேச...

''நீ சும்மா இரும்மா... அப்புறம் உனக்குப் பொல்லாப்பு...'' தீபாவின் நாத்தனார் தன் அம்மாவை அடக்குவது போல தீபாவைச் சாட....

ஆளாளுக்குப் பார்வதியை விமர்சனம் செய்ய, எதைப் பற்றியும் கவலைப் படாத தினுசில், பார்வதி தானே தீர்மானித்துக் கொண்ட வகையில் ஆம்புலன்சின் படியில் காலை வைத்து ஏறிக் கொண்டாள். உள்ளே ராமநாதனின் உடல் கிடத்தப்பட்டிருக்க... சென்னையிலிருந்து கோபிக்குக் கிளம்பியது ஆம்புலன்ஸ்.

பின்னாலேயே கார்களில் மகள்களும் மாப்பிள்ளைகளும் உறவினர்களும்...

''ஆனாலும் உனக்குப் பிடிவாதம் ஜாஸ்திம்மா... யாரோடும் கார்லே வராம தனியா அப்பாவோட பாடியோட ஆம்புலன்ஸ்லே வந்துட்டே... போ...

அத்தை... அப்புறம் எங்க மாமியார், மாமனார்... ஏன் உன்னோட சித்தி, சித்தப்பா எல்லோரும் உன்னோட வறட்டுப் பிடிவாதத்தைப் பத்திப் பேசிண்டு வந்தா...''

காரியம் எல்லாம் முடிந்த ஒரு ஓய்வுநாளில் தீபா கேட்க...

''தீபா... பீ பிராக்டிகல்... எனக்குத்தான்



''மனுத்தாக்கல் செய்யற அலுவலகத்தில் ஒருத்தரை அவசரமாக வெளியேற்றி விட்டு இன்னொருத்தரை உள்ளே தள்ளறாங்களே... எதுக்காக?''

''மனுத்தாக்கல் செய்யறப்ப கட்சி வேட்பாளரை மாற்றிவிட்டாங்களாம்!''

- தீபா




- சம்யுக்தா

இழப்பு, மனக்கஷ்டம், பசி, தாகம் ஒண்ணும் வேண்டியிருக்காது. ஆனா மத்தவாள்லாம் அப்படியா? உங்க மாமனார் மாமியார் சர்க்கரை பேஷண்ட், லதா கைக்குழந்தைக்காரி. உன் அத்தைக்கு வேளைக்குச் சாப்பிடலைன்னா தலைவலி வந்திடும்.

என்னோட உட்கார்ந்து வந்தா உங்களால வழியிலே ஹோட்டல்லே நிறுத்த முடியுமா.. என்னைப் பார்க்க வைச்சுட்டு சாப்பிட முடியுமா சொல்லு... யாரோ என்னவோ பேசிட்டுப் போகட்டும்.

நான் அப்பாவோட வந்த அந்த ஆறு மணி நேரத்திலே தொணதொணன்னு பேச வேற யாரும் பக்கத்திலே இல்லாததால, நான் வாழ்ந்த அறுபது வருட வாழ்க்கையைப் பத்தியே யோசிச்சுண்டு வந்தேன்... எனக்கு ரொம்பத் திருப்திதான் போ...''

பார்வதி பேசிக் கொண்டே போக, அம்மா பற்றிய வியப்பு இன்னும் இன்னும் மேலோங்கிக் கொண்டேயிருந்தது தீபாவுக்கு. ●

---

## போடா(டே)தே..!


* எ.த.இளங்கோ

''தேர்தலில் எந்தக் கட்சிக்கு வோட்டு போட்டாலும் சரி; தி.மு.க.வுக்கு மட்டும் போடாதே'' - என்று வடசென்னை வாக்காளர் விழிப்புணர்வு இயக்கத்தினை அமைத்து, துண்டுப் பிரசுரம் மூலம் பிரசாரம் செய்து வருகிறார் எ.த. இளங்கோ என்ற இளைஞர். இப்பிரசாரத்தால் நிறைய இடையூறுகளைச் சந்தித்து வரும் அவரிடம், ''ஏன் ஸார் தி.மு.க. மேல இவ்வளவு காண்டு?''-ன்னு கலாய்ச்சா ஆட்டம்பாம் கணக்கா வெடிக்கிறாரு:

''மூணு தேர்தல்ல பத்து வருஷமா தி.மு.க இந்தத் தொகுதியில ஜெயிச்சிருக்கு. தொகுதியில ஒரு ஆபீஸ்கூட இல்ல. அடிப்படை வசதி ஏதுமில்லாம புறக்கணிக்கப்பட்ட தொகுதியாயிருக்கு.




ஐம்பது மீனவக்குப்பம் கடலரிப்பால் அவதிப்படுது. கொடுங்கையூர் குப்பை வளாகத்தின் கொடுமை கொஞ்ச நஞ்சமில்ல. ஒரு ரேஷன் கடைக்கு 1000 கார்டுன்னா, இங்கே 2000 கார்டுங்க. தப்புக்கு ஒருமுறைகூட பனிஷ்மெண்ட் தரலேன்னா எப்படி ஸார்?'' என்கிறார்.

- சசி

இந்தியாவின் ஒட்டுமொத்த கவனத்தை ஈர்க்கும் வி.ஐ.பி. தொகுதிகளில் ஒன்று குஜராத் மாநிலம் காந்தி நகர் பாராளுமன்றத் தொகுதி. 1991 முதல் நான்கு முறை இங்கே போட்டியிட்டு ஜெயித்தவர் பா.ஜ.க. தலைவர் எல்.கே.அத்வானி. இம்முறை பா.ஜ.க.வின் பிரதமர் வேட்பாள ரான அத்வானியை எதிர்த்து, பிரபல நடனக் கலைஞரும், சமூக ஆர்வலருமான மல்லிகா சாராபாய் களமிறங்கி இருப்பது தான் தொகுதியின் பரபரப்பு. அவருடன் ஒரு எக்ஸ்க்ளூஸிவ் டெலிபோன் பேட்டி:

*போட்டியிடுவது வெறும் பப்ளி சிடிக்காகவா?*

''நிச்சயமாக இல்லை. கடந்த முறை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, லோக் சபாவுக்குச் சென்ற 534 எம்.பி.க்களில் 128 பேர்கள் மீது கிரிமினல் குற்றச்சாட்டுகள் உள்ளன. இன்று அரசியலை ஆக்ரமித்துக் கொண்டிருப்பவர்கள் லஞ்ச ஊழல் பேர்வழிகளும், கிரிமினல்களும்தான். நல்லவர்கள் அரசியலுக்கு வரவேண்டும். ஆனால் நல்லவர்கள் பலரும் ஒதுங்கியே இருக்கிறார்கள். எனவே நான் போட்டி யிடுகிறேன்.''

*ஏன் காந்தி நகர்?*

''காந்தி நகர் நான் பிறந்து வளர்ந்த பூமி. என் கர்ம பூமி. இங்குள்ள மக்களின் வாழ்க் கைத் தரம் உண்மையிலேயே முன்னேற வேண்டும் என்றெண்ணியே என் தொகுதி யைத் தேர்ந்தெடுத்தேன்.''

*காங்கிரஸில் ஏன் டிக்கெட் இல்லை?*

''இதை அவர்களிடம்தான் கேட்க வேண்டும்? நான் சுயேச்சை வேட்பாளராக மனு தாக்கல் செய்தாலும், தனி மனுஷி இல்லை; எனக்குப் பின்னால் என்னுடைய நடனம், சமூகப் பணி என்று 25 வருட சேவை இருக்கிறது. மக்களுக்காக என் நேரத் தையும், உழைப்பையும் நான் அளித் திருக்கிறேன். எனவே, நான் ஒன்றும் also run ரக சுயேச்சை இல்லை. சி.பி.ஐ. கட்சி எனக்கு ஆதரவு தெரிவித்துள்ளது.''

**“அத்வானியை நோக்கி நான் எழுப்பிய கேள்விக் கணைகளுக்கு இதுவரை அவரது தரப்பிலிருந்து எந்தப் பதிலுமில்லை.”**

# மோடியையும்

*அத்வானியை எதிர்த்து?*

''நான் காந்தி நகரில் அத்வானி யையோ, மோடியையோ எதிர்த்துப் போட்டியிடவில்லை. அமைதியைக் கெடுக்கும் மதவாதத்தை, மதத் துவேஷத்தைப் பரப்பும் சக்திகளை எதிர்த் துப் போட்டியிடுகிறேன்.''

*அதென்ன ஐந்து கேள்விகள்?*

''ஐந்து கேள்விகள் மட்டுமல்ல... தேர்தல் களமிறங்கியுள்ள நான், பா.ஜ.க. வேட்பாளரான எல்.கே. அத்வானியை நோக்கி மூன்றாம் தவணையில் எட்டு

கேள்விகளை பல்வேறு கோணங்களிலும் எழுப்பியுள்ளேன். இதுவரை அவரது தரப்பிலிருந்து எந்தப் பதிலுமில்லை. ஆனாலும் நான் தொடர்ந்து கேள்விகள் எழுப்பிக் கொண்டுதான் இருப்பேன்.''




***பிரசார வியூகம்?***

''இதுவரை 150 கிராமங்களுக்குச் சென்று ஒரு லட்சத்து எழுபதாயிரம் பேரைச் சந்தித்து வோட்டு கேட்டிருக்கிறேன்.''

***பணபலம்?***

''பிரசாரத்துக்காகச் செல்கிற இடங்களில் சாதாரண மக்கள் கூட தங்களால் முடிந்த தொகையை என் தேர்தல் செலவுக்காகக் கொடுக்கிறார்களே... அதுதான்.''

***ஜெயிப்பீர்களா?***

''இருபது ஆண்டுகளாக அத்வானி இந்தத் தொகுதியின் எம்.பி.யாக இருந்தாலும், குடிநீர், கழிப்பறை போன்ற அடிப்படைப் பிரச்னைகளைக் கூட அவர் தீர்த்து வைக்காததால் மக்களுக்கு அவர் மீது அதிருப்தி நிலவுகிறது. இது எனக்குச் சாதகமான விஷயம். நான் வீடு வீடாகச் சென்று வாக்கு சேகரிப்பதைப் பார்த்துவிட்டு அத்வானியின் குடும்பத்தினரும் வீடு வீடாகச் செல்கிறார்கள். காங்கிரஸ் வேட்பாளர் ஏழு கோடி ரூபாய் செலவழித்திருப்பதாகச் சொல்கிறார்கள். முடிவு மக்கள் கையில்.''

***ஒருவேளை தோற்றால்...?***

''இந்தத் தேர்தலில் தோல்வியடைந்துவிட்டால், அடுத்து சட்டமன்றத் தேர்தலில் நரேந்திர மோடியை எதிர்த்து நின்றாலும் நிற்பேன். ஆனாலும், இந்த முறை ஜெயிப்பேன் என்றுதான் நினைக்கிறேன்.''

பேட்டி : **எஸ்.சந்திரமௌலி**

# எதிர்ப்பேன்!

## – மல்லிகா சாராபாய்

# 12 லட்ச

காஸ்பந்து உலகக் கோப்பைப் போட்டிக்கு நிகராக 2009 ஐ.பி.எல்.-ஐ தென் ஆப்பிரிக்க ரசிகர்கள் பரவசத்துடன் கண்டு களிக்கிறார்கள். நாளுக்கு நாள் மைதானத்துக்கு வருகிற ரசிகர்களின் எண்ணிக்கை அதிகமாகிக்கொண்டு வருகிறது. கொண்டாட்டத்துக்கு இடையே இந்திய அணிக்கு ஒரு புதிய வீரர் கிடைத்திருக்கிறார்.

இந்த வருட ஐ.பி.எல்.-க்காக ஏழரை கோடிக்கு விலை பேசப்பட்டவர்கள் ஃபிளிண்டாஃப்பும் பீட்டர்சனும். பீட்டர்சனால் பெங்களூர் அணிக்கு எந்த சகாயமும் ஏற்படவில்லை. ஃபிளின்டாஃபின் பேட்டிங்கைவிட பந்து வீச்சு மிகவும் ஏமாற்றம். முனைப்போடு பந்து வீசியது போலத் தெரியவில்லை. சென்னை சூப்பர் கிங்ஸின் ஒவ்வொரு ஆட்டத்திலும் ஃபிளிண்டாஃபின் பந்து வீச்சுதான் பலமாக அடிவாங்கியது. ஓர் அணி அதிக விலை கொடுத்து வீரர்களை வாங்குவதில் பத்திரிகைகளுக்கு வேண்டுமானால் ஒரு கிளுகிளுப்பு இருக்கலாம். ஆனால் செய்தியிலேயே இடம்பெறாத 12 லட்சம்தான் இறுதியில் காரியம் சாதித்துக் கொடுத்திருக்கிறது.




முதல்தர கிரிக்கெட் எதுவும் விளையாடாத உத்தரப்பிரதேசத்தைச் சேர்ந்த 18 வயது கம்ரான் கான் இப்போது ஐ.பி.எல்.-2வின் புதிய நட்சத்திரம். கம்ரான் இதுவரை எந்த ரஞ்சி அணி சார்பாகவும் முதல்தர ஆட்டம் ஆடியதில்லை. தச்சர் ஒருவரின் மகனான அவரை ஓர் உள்ளூர் 20-20 போட்டியில் பார்த்த ராஜஸ்தான் அணியின் ஆஸ்திரேலிய மேலாளர் டேரன் பெரி, வார்னேயிடம் விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். கம்ரானை அழைத்துச் சோதித்துப் பார்த்த வார்னே, அவரது பந்து வீச்சில் பொறி இருப்பதைக் கண்டு 12 லட்ச ரூபாய்க்கு விலை பேசி தென் ஆப்பிரிக்கா அழைத்துச் சென்றுவிட்டார்.

உத்தரப்பிரதேச ரஞ்சி அணிக்கான தேர்வில் பலமுறை தோல்வி கண்டவர் கம்ரான். பெற்றோர் இல்லாமல் தமது சகோதரர்களால் வளர்க்கப்பட்டவர். கிரிக்கெட் ஆட வெளியூர் செல்லும்போது

**ச.ந. கண்ணன்**



“ஏதேதோ செய்து எப்படியாவது வாக்களித்திடவேண்டும், ஒரு வாக்காளர் அட்டையைப் பெற்றிட வேண்டும் என ஒவ்வொரு இந்தியக் குடிமகனும் பொறுப்பாகச் சிந்திக்கிறார்கள்” என சமீபத்தில் வந்த ஒரு செய்தி காதில் தேன்

விடுதியில் தங்கப் பணவசதி இல்லாமல், பிளாட்ஃபார்ம் டிக்கெட் வாங்கிக்கொண்டு இரவு முழுக்க ரயில் நிலையத்தில் தங்கும் அளவுக்கு வாழ்க்கையில் பல அவலங் களைச் சந்தித்திருக்கிறார். இப்போது தென் ஆப்பிரிக்காவில் அவருக்கு ஐந்து நட்சத்திர விடுதியில் அறை வழங்கப்பட்டாலும், இன்னமும் ரயில் நிலையத்தில் உறங்கிய சோகத்தையும் வறுமையையும் மறக்க வில்லை என்கிறார் கம்ரான்.



★ கம்ரான்

கம்ரானின் கிராமத்தில் மின்சார வசதி இல்லாததால், இப்போது வாடகைக்கு டி.வி.யும் ஜெனரேட்டரும் வாங்கி வைத்துக்கொண்டு கம்ரான் ஆடும் ஆட்டங்களை டி.வி.யில் பார்த்து மகிழ்கிறார்கள் ஊர் மக்கள். கொல்கத்தா அணியை ராஜஸ்தான் அணி வென்றதில் கம்ரான் முக்கியப் பங்கு வகித்ததில் ஊர் மக்கள் குஷி யாகி, அன்று இரவு முழுக்க திருவிழா போல ஆடிப்

# ஹீரோ!

பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். அடுத்த மாதம் இங்கி லாந்தில் நடக்கும் 20-20 உலகக் கோப்பைக் கான இந்திய அணியில் கம்ரான் இடம் பிடிப்பது இப்போதே உறுதி செய்யப் பட்டுவிட்டது.

12 லட்ச ஊதியம் பற்றி கம்ரான் என்ன சொல்கிறார்? ''இரண்டு வருடங்களுக்கு முன்பு இந்தப் பணம் கிடைத்திருந்தால், மருத்துவ வசதியின்றி இறந்துபோன என் தாயைக் காப்பாற்றியிருப்பேன்!'' ●

## ஒஸாமாவின் ரேஷன் கார்டு!




...பாய்ச்சுகிறது. விட்டால், ஒஸாமாகூட வோட்டு போடுவார் போலிருக்கிறது; சமீபத்தில் வெளியான இந்தச் செய்தியைப் பார்த்தால். ஒஸாமா பின்லேடனின் பெயரிலும், மும்பை தீவிரவாதத் தாக்குதலில் ஈடுபட்ட அஜ்மல் கஸாப் பெயரிலும் எடுக்கப்பட்ட ரேஷன் கார்டுகள் மும்பை நகரை ஜாலியாக வலம் வருவதாக ராஜ்தாக்கரே சுட்டிக்காட்டி, அந்த ரேஷன் கார்டுகளின் நகல்களையும் டமால் என எடுத்துக் காட்ட, இதெல்லாம் டூ மச்... த்ரீ மச் இல்லையா என மும்பை சலசலத்துப் போயுள்ளதாகக் கேள்வி! அதை வைத்து வாக்காளர் அட்டை வாங்கி வோட்டு போட்டாலும் ஆச்சரியம் இல்லை!

- நளினி சம்பத்குமார்

# அஞ்சல் வழியில் ஹிந்தியில் பேச பயிற்சி பெறுவோமா?
# அஞ்சல் வழியில் ஆங்கிலத்தில் புலமை பெற்று பேச பயிற்சி பெறுவோமா?
# 'அதிகமான மொழிகள் அறிந்தவர்களே - அதிக வெற்றி வாய்ப்புகளைப் பெறுகிறார்கள்'

சென்ற சில ஆண்டுகளுக்கு முன் ஒரு இசைப் போட்டி நமது தொலைக்காட்சியில் நடைபெற்றது. தன் மொழி அல்லாத மற்றொரு மொழியில் பாடலைப் பாட வேண்டும். இதில் ஒரு பஞ்சாபிக்காரர் சுப்ரமணிய பாரதியின் 'ஓடி விளையாடு பாப்பா' என்ற பாடலைப் பாடினார். அவர் உச்சரிப்பு முற்றிலும் மாறுபட்டு இருந்தது. அதேபோல் ஒரு தமிழ்க்காரர் ஹிந்தி பாட்டு பாடினார். இருவரின் பாடல்களைப் புகழ்ந்து முறையே தமிழகத்திலிருந்தும் வட இந்தியாவிலிருந்தும் ஆயிரக்கணக்கில் கடிதங்கள் வந்தனவாம்.

தன் மொழியை மற்றொரு மொழிக்காரர் பேசுவதைக் கேட்கும்போது ஆனந்தமாக இருக்கிறது. அது மட்டுமல்ல, மற்றவர் இதயத்தை வெற்றி கொள்ள அவர்களது மொழியில் பேசுவதுதான் மிக எளிய வழியாகும்.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் நாம் நம் தமிழ் மொழியைத் தவிர ஹிந்தி மொழியையும் அறிந்திருத்தல் மிக அவசியம். ஏனெனில் மற்ற மாநிலத்தவர் அனைவரும் ஹிந்தி மொழி அறிந்தவராக இருப்பதால் அந்த மாநிலங்களுக்குச் செல்லும்போது ஹிந்தி மொழி நமக்கு துணை புரிகிறது. புண்ணிய ஸ்தலங்களுக்கு... அதாவது காசி, கயா போன்ற இடங்களுக்குப் போகும்போது இந்தி மொழி தெரியாவிட்டால் அவஸ்தைதான்.

இந்தி மொழியில் பேசக் கற்றுக் கொண்டுவிட்டால் போதும், மற்ற மொழிகளில் பேசுவது மிக எளிதாகிவிடுகின்றது.

நிற்க - தாய் மொழி மற்றும் ஹிந்தி மொழியைத் தவிர நல்ல ஆங்கிலத்திலும் உரையாடத் தெரிந்தவர்கள் எந்த ஒரு துறையிலுமே அதி விரைவில் முன்னேறி விடுகின்றனர். தவிர, நம் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கச் செல்லும்போதும் அவர்களது படிப்பைப் பற்றி அறிவதற்காக ஆசிரியர்களைப் பார்க்க செல்லும்போதும் ஆங்கிலத்தில் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. கணவரது நண்பர்களோ, பிள்ளைகளின் நண்பர்களோ தொலைபேசியில் பேசும்போதும் ஆங்கிலத்தில் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அப்படி பேச முடியாதபோது மனம் வருந்துகிறது.

இவை அனைத்தையும் மனத்தில்கொண்டு பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கம் பயிற்சி மையம், பேச்சு மொழி இந்தி மற்றும் பேச்சு மொழி ஆங்கிலப் பயிற்சிகளை அஞ்சல் வழியில் நடத்தி வருகின்றது. இந்தப் பயிற்சி பற்றிய மற்ற விவரங்கள் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளன.

## பேச்சு மொழி இந்தி டிப்ளமா/ பேச்சு மொழி ஆங்கில டிப்ளமா

1) பயிற்சியில் மொழி ஆர்வமுடைய எவரும் சேரலாம். (பள்ளிச் சிறுவர் முதல் ரிடையர் ஆனவர் வரை)

2) பேச்சு மொழி இந்தி பயிற்சி தமிழ் மூலமாகவும், ஆங்கிலம் மூலமாகவும் நடத்தப்படுகிறது.

3) பேச்சு மொழி ஆங்கிலம் தமிழ் மூலமாகவும், ஹிந்தி மூலமாகவும் நடத்தப்படுகிறது.

4) அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.

5) இரு வழித் தொடர்பு (Two Way Communication) இப்பயிற்சியில் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர்/post மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப்பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றைத் திருத்தி, பயிலுபவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

6) ஆறு நேர்முக வகுப்புகள் (சனி அல்லது ஞாயிற்றுக் கிழமைகளில்) நடத்தப்படுகின்றன. இவ்வகுப்புகளில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் இந்தி மற்றும் ஆங்கில மொழியில் உரையாட (மதிய உணவுடன்) காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

7) நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக (மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான், தஞ்சாவூர், நாகப்பட்டினம், புதுச்சேரி போன்ற இடங்களில் உள்ளன. தவிர, 15 பேர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் மாணவர்கள் உள்ள இடங்களில் மொழி விளக்க நிபுணர்கள் உள்ளனர்.

8) பேச்சு மொழி ஹிந்தி: (ஒலி நாடாக்கள் மற்றும் ஸிடி) அகர உச்சரிப்பிலிருந்து பலவகை

சூழ்நிலைகளில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட இரட்டை ஒலி நாடாக்கள் (Twin Cassettes) வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுடன் வழங்கப்படும் துணை நூலைப் படித்த வண்ணம், ஒலிநாடாக்களைக் கேட்டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம்.

9) பேச்சு மொழி ஆங்கிலம் (ஸி டி) அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலைகளில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட ஸிடிக்கள் வெளியிடப்பட்டுள்ளன.

இந்த ஒலிநாடாக்களை /ஸி.டி.யைப் பெற விரும்புபவர்கள் ரூபாய் 150க்கான டிமாண்ட் டிராப்ட்/ உள்ளூர் காசோலை, SBIOA Institute, Chennai என்ற பெயருக்கு எடுத்து அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். இரண்டுமே வேண்டுமென்றால் 300 ரூபாய்க்கான டி.டி/உள்ளூர் காசோலை அனுப்ப வேண்டும்.

10) பயிற்சியில் தேறியவர்களுக்கு 'Diploma in Conversational Hindi/Diploma in Conversational English' சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு வருடமும் நடைபெறும் பட்டமளிப்பு விழாக்களில் இந்த சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இப்பட்டமளிப்பு விழாக்களில் இதுவரை முன்னாள் பிரதமர் சந்திரசேகர், பாரத் ரத்னா சி.சுப்ரமணியம், டாக்டர் கிரண் பேடி ஐ.பி.எஸ் போன்றவர்கள் பங்கெடுத்து சான்றிதழ்களை வழங்கியுள்ளனர்.

11) பயிற்சிக் காலம் ஆறுமாதம் (ஜனவரி முதல் ஜூன் வரை, ஜூலை முதல் டிசம்பர் வரை) அடுத்த வகுப்பு ஜூலை 2009ல் துவங்க உள்ளது.

12) பயிற்சிக் கட்டணம் ரூ 1000/- (ரூபாய் ஆயிரம் மட்டுமே) (நேர்முகப் பயிற்சி, தேர்வுக்கட்டணம் உட்பட)

ஜூலை 2009ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர் காசோலை (Rs.100) SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட தபால் தலையுடன் (ரூ.10) கூடிய உறையில் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதவும். (ஒவ்வொரு பயிற்சிக்கும் தனியாக ரூ.100 அனுப்ப வேண்டும்). உறையின் மேல் பேச்சு மொழி ஹிந்தி அல்லது பேச்சு மொழி ஆங்கிலம் மற்றும் பயிற்று மொழியைக் குறிப்பிட வேண்டும். (இந்த ரூபாய் 100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.)




* பதினொன்றாவது பட்டமளிப்பு விழா, தங்கப்பதக்கங்கள் பெற்ற மாணவர்களுடன் முக்கிய விருந்தினர் மற்றும் SBIOA நிர்வாகிகள்

---

**The Executive Director, SBIOA Institute,**
229, N.S.C.Bose Road, P.B.No.1279, Chennai 600 001.
Phone No: 044 - 25340226

வட இந்தியாவில் இருந்து வந்த அன்பர்கள் தமிழ் கற்றுக்கொள்ள ஏதுவாக ஹிந்தி மூலம் தமிழ் அஞ்சல் வழியில் கற்பிக்கப்படுகின்றது.

## அரக்கோணம் பாலிடிக்ஸ்

# அதிரடி ஜெகத்...

திருத்தணி - சோளிங்கர் சாலையில் சற்று உள்வாங்கியிருக்கும் கிராமம் எஸ். அக்ரஹாரம். அந்தக் கிராமத்தை நெருங்கும்போதே, 'உங்கள் சின்னம் மாம்பழம்... மாம்பழம்' என்ற கோஷம் ஸ்லோமோஷனில் நம்மை வந்தடைகிறது. 'நடக்கப் போவது பாராளுமன்றத் தேர்தலா... சட்டமன்றத் தேர்தலா... உள்ளாட்சித் தேர்தலா...' என்றெல்லாம் கூட அறிந்திராத பாமர மக்கள். அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் கை, உதய சூரியன், மாம்பழம் என்ற சின்னங்கள்தான். பிரச்னைகள் என்று பார்த்தால், ரேஷன் கடை, சாலைகள், பஸ் வசதி, குடி தண்ணீர் என்று எல்லாம் உள்ளூர்ப் பிரச்னைகள்தான்.



'உங்க வோட்டு யாருக்கு?' என்று செருக்கனூர் காலனி பெண்களிடம் கேட்டோம். தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் ஏரியில் மண் அள்ளிக்கொண்டிருந்த அவர்கள் மைக் சத்தம் கேட்டதும் வரிசையாக ஏரிக் கரையில் போய் நின்று கொண்டார்கள். ''ஒரு ரூபாய் அரிசி போட்டாங்க... டி.வி. பொட்டி கொடுத்தாங்க'' என்று தி.மு.க. வின் சாதனைகளை நாம் பட்டியலிடத் துவங்கியதும், ''ஆமாம்... போட்டாங்க பளபளான்னு அரிசி'' என்று முகத்தை ஒரு வெட்டு வெட்டினார் ஒரு பெண். கொஞ்சம் அதிர்ச்சியில் நாம் பின்வாங்கினோம். ''பொட்டி (டி.வி.) கொடுத்தாங்க. ஆனால் எல்லாம் வெடிச்சுப் போயிடுச்சே'' என்றார் மற்றொரு பெண். வேட்பாளர் வேலுவின் பின்னே போன கார்களில் உள்ளவர்களைப் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டார்கள் அந்தப் பெண்கள். ''இருபது நாளாக மோட்டார் ரிப்பேர். தண்ணீர்த் தொட்டியில் தண்ணீர் ஏறலை. குடிதண்ணீருக்கு எங்கே போவது?'' என்று பொங்கி எழுந்தார்கள்.



வேலுவுக்குத் தொகுதியில் நல்ல பெயர் இருக்கிறது. தொகுதிக்குட்பட்ட ரயில் நிலையங்களில் எக்ஸ்பிரஸ் ரயில்களுக்கு நிறுத்தம் ஏற்படுத்திக் கொடுத்தது, சென்னைக்குக் கூடுதல் ரயில்கள் விட்டது, மேம்பாலங்கள், சுரங்கப் பாதைகள் கட்டியது... என்று தொகுதிப் பணிகள்

பல. மேலும் தமிழ்நாட்டுக்குப் பல புதிய ரயில் திட்டங்களைக் கொண்டு வந்தவர் என்ற பாராட்டும் படித்த மக்களிடையே இருக்கிறது. இவருடைய பலம், தொகுதியில் பரவலாக இருக்கும் வன்னியர் வகுப்பைச் சேர்ந்தவர்கள்.




தொகுதியில் நெசவாளர்கள் நிறைய. அவர்களைப்படுத்திய 'சென் வாட்' வரியை நீக்கியதை, சாதனையாகச் சொல்லிப் பிரசாரம் செய்கிறார் வேலு. சென்ற தேர்தலில் ஒரு லட்சம் வோட்டு வித்தியாசத்தில் தி.மு.க. கூட்டணியோடு வென்றவர் வேலு. ஆனால் அப்போது அவரை எதிர்த்து நின்றவர் அ.தி.மு.க.வைச் சேர்ந்த சாதாரணப் பிரமுகர் சண்முகம். இப்போது கூட்டணி உல்டா ஆகி, வேலு அ.தி.மு.க. அணியில் போட்டியிட்டாலும், அவருக்குக் கடும் போட்டியை உருவாக்குகிறார் தி.மு.க. வேட்பாளரும் வன்னியப் பிரமுகருமான ஜெகத்ரட்சகன். தொகுதியில் முதலியார் சமூகம் செல்வாக்குடன் இருக்கிறது.



# அசத்தும் வேலு!

ஜெகத்ரட்சகன் 1999ல் இதே தி.மு.க. கூட்டணியில் ஒரு லட்சம் வாக்கு வித்தியாசத்தில் வென்றவர். இப்போது தி.மு.க.விலேயே இணைந்து போட்டியிடுகிறார் ஜெகத். தி.மு.க.வின் சாதனைகளைச் சொல்லி வோட்டு கேட்கிறார் ஜெகத். ஆனால் யதார்த்த நிலை அவருக்கு எதிராக இருக்கிறது. மத்திய கூட்டணி அரசு, விவசாயக் கடன்களைத் தள்ளுபடி செய்ததைப் பற்றிச் சொல்லலாம்.

''பசு மாடு வாங்க 16,000 ரூபாய் கடன் வாங்கினேன். வட்டியெல்லாம் சேர்த்து 46,000 ரூபாய் கட்டினேன். தள்ளுபடி செய்யவில்லை. ஆனால் 70 லட்சம் கடன் வாங்கிய உள்ளூர் பணக்காரருக்கு (பெயர் சொல்கிறார்) முழுத் தொகையையும் தள்ளுபடி செய்து விட்டார்கள். இது என்ன ஸார் நியாயம்?'' - இது தாழவேட்டைச் சேர்ந்த மல்லிகை விவசாயி ராஜமாணிக்கத்தின் கேள்வி.

ஜெகத்ரட்சகனைப் பற்றி பா.ம.க. மேடைகளில் பேசும்போது, 'சாராய வியாபாரியைத் தோற்கடியுங்கள்' என்று பேசுகிறார்கள். ''நான் கல்வி நிலையங்கள் வைத்திருக்கிறேன்; ஐயாயிரம் மாணவர்களுக்கு இலவசக் கல்வி கொடுக்கிறேன்'' என்று பேசும் ஜெகத், 'சாராய வியாபாரி' என்று சொல்லப்படும் விமர்சனத்துக்குப் பதில் சொல்வதில்லை!

ஜெகத்ரட்சகன் சமீபத்தில்தான் தி.மு.க.வில் இணைந்தார். வாக்காளர்களின் நம்பிக்கையைப் பெறமுடியுமா? ''இதனால் ஒன்றும் பெரிய பாதிப்பு

**வாய்ஸ்**

**நேமநாதன் :** (மில் மூடப்பட்டதால் வேலையின்றி இருப்பவர்)

"தேர்தலில் கூட்டணி ஏதும் இல்லாமல் தனித்தனியாக நிற்க வேண்டும். எனக்கு ஜாதி, பணம் என்று யாரும் அழுத்தம் கொடுக்க முடியாது."


* சஞ்சீவி

**ஜலீல் :**

"வேலு, நிறைய ரயில்களை சென்னைக்கு விட்டிருப்பதால் வேலை வாய்ப்புக்காக அங்கே போய் வருவது மிக எளிதாக இருக்கிறது. ஜெகத்ரட்சகன் போன்றவர்களைச் சந்திப்பதே கஷ்டம்."


* நேமநாதன்

**ஜெயலட்சுமி (கல்லூரி மாணவி):**

"தேர்தலுக்கு முன் கிராமத்தில் வேட்பாளர்களின் ஜாதகம் அலசப்படும். அப்போது நல்லவர் யார் என்று புரிந்து கொள்வேன்."


* ஜெயலட்சுமி

**ஆனந்தன் ('ஐந்தாவது தூண்' வேலூர் மாவட்ட அமைப்பாளர்)**

"ஜனங்க பணம் எப்போ கொடுப்பாங்க என்று காத்துக்கிட்டிருக்காங்க. நாங்கள், 'பணம் கொடுக்கக்கூடாது, பணம் வாங்கக்கூடாது' என்றெல்லாம் தீவிரப் பிரசாரம் செய்கிறோம்."


* ஆனந்தன்

**சஞ்சீவி :**

எங்க ஊர்ல டீ.வி. பொட்டி கொடுக்கவில்லை. ஒரு ரூபா அரிசி டிம்மா இருக்கு. மத்தபடி நம்ம ஜனங்க மருத்துவர் அய்யாவோட மாம்பழச் சின்னத்துக்குத்தான் வோட்டுப் போடுவாங்க.


* ஜலீல்

வராது. தி.மு.க. இங்கு பலத்தோடு இருக்கிறது'' என்கிறார் அம்மூர் பகுதி தி.மு.க. செயலாளர் பாபு. இத்தொகுதியில் தாழ்த்தப்பட்டவர்கள் பரவலாக இருக்கிறார்கள். திருமாவளவன், பூவை ஜெகன்மூர்த்தி ஆகியோர் தி.மு.க.வை ஆதரிப்பதால் அவர்களின் வோட்டு ஜெகத்துக்கு பிளஸ் பாயிண்ட்.

தமக்கு மீண்டும் வாய்ப்பு கொடுக்கப்பட்டால் தென்னக நதிகள் இணைப்பு, நெல்லுக்குக் கூடுதல் விலை, நெசவாளர்களுக்கு இலவச மின்சாரம், தோட்டக்கலைக்கு முன்னுரிமை என்று, வேலு பேசும் போது பல உறுதிமொழிகளைச் சொன்னாலும், அவற்றைக் குறித்தெல்

**கடைசி மூன்று நாட்கள் தி.மு.க. 'பணமழை'க்கு ஏற்பாடு செய்து விடும் என்பது பெரும்பாலான வாக்காளர்களின் எதிர்பார்ப்பு!**

லாம் யாரும் சீரியஸாக எடுத்துக் கொள்வதில்லை. வேலுவுக்குத் துடிதுடிப்புடன் அ.இ. அ.தி.மு.க. தொண்டர்கள் ஓடியாடுவது பூஸ்ட்.

ஜெகத் மேடையில் பேசும்போது கலைஞர் அரசின் சாதனைகளைச் சொல்லி, கூடவே நம்மாழ்வார் பாசுரங்களையும் எடுத்து விட்டு அசத்துகிறார்.

இந்தக் கூச்சலில் தே.மு.தி.க. வேட்பாளர் சங்கரைத் தேட வேண்டியதாக இருக்கிறது. தொகுதியில் கடைசி மூன்று நாட்கள் தி.மு.க. 'பணமழைக்கு' ஏற்பாடு செய்து விடும் என்பது பெரும்பாலான வாக்காளர்களின் எதிர்பார்ப்பு!

**- ப்ரியன்**

படங்கள் : **ராஜன்**

# கவிதைகள்

தாரா கணேசன்

குறைந்த பட்சம்
ஐந்தாறு கொக்குகளேனும்
நீந்திக்கொண்டிருக்கும்
அதிக நீரற்ற அக்குளம்
தளும்பி வழிகிறது
தொடர்மழையில்

ஸ்படிகமாய் மின்னும்
அந்நீர்ப்பரப்பின் அமைதியில்
தனியாய் நீந்தும்
ஒரேயொரு வெண்பறவையன்றி
மகிழ்ச்சி ததும்ப நீந்த
வேறெந்தப் பறவைகளுமில்லை இன்று

அலைகளேதும் எழுப்பாமல்
நீரில் நகர்ந்தபடியிருப்பது
சொல்லவியலாத அதன்
துக்கமாகத்தானிருக்கும்.

***

என் பென்சில்கள்
உன் நினைவுகளால் கூராகி
உன் நினைவுகளால் கூராகி
கூனான சில வார்த்தைகளின்
முதுகு நிமிர்த்தியது

மறுபடியும்
உன்னில்
தன்னைச் சீவியபடியே
என் பென்சில்கள்

# சூரியக்குளத்து முதலைகள்

**கதைக்கு முன் :** திப்புசுல்தான் மரண மடைந்து ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு வேலூர்க் கோட்டையைக் கிளர்ச்சி செய்து கைப்பற்றினார்கள். ஒன்பது மணி நேரமே நீடித்த இந்த 'வெற்றி', 1806ஆம் ஆண்டு ஜூலை 10 அதிகாலையில் தொடங்கியது. இதற்கு ஐம்பது ஆண்டுகள் கழித்து நடை பெற்றது 'சிப்பாய்க் கலகம்' என்று கொச்சைப் படுத்தப்பட்ட சுதந்திரப் போராட்டம். இரண்டுக்கும் அடிப்படை, மத உணர்ச்சி களைப் புண்படுத்திய நடவடிக்கைகள்தான்.

பாலாறு சலசலத்து ஓடுகிறது. கோட்டை மதில் மேலிருந்து சாயங்கால நேரத்தில் பார்க்கிறபோது மஞ்சள் நிற ஒளிபட்டு எல்லாமே தங்க மயமாக ஜாலம் காட்டிக் கொண்டிருப் பதைக் காண முடிகிறது. சுற்றிலும் பசுமை யான வயல்வெளிகள், வாழைத் தோட் டங்கள்... தென்னை, மாமரச் சோலைகள் என்று இயற்கையின் சௌந்தர்யம் முழுசோபையோடு திகழ்கிறது.

நான்கைந்து நாட்களாகவே அச்சுத ரங்கராயனுக்கு மனத்தில் அமைதியில்லை. நிலைகொள்ளாமல் தவிக்கிறது. நாளைக்கு என்ன ஆகும், அடுத்த நாள் என்ன நடக் கும் என்பதையெல்லாம் ஆருடம் பார்த்துச் சொன்னால் கூட நம்புவது சிரமம்தான்.

ஜலகண்டேசுவரர் ஆலய மணியின் நாதம், கம்பீரமாக எழுந்து, அலையலை யாகப் பரவி அந்த மாலை வேளையின் சோலைக்குக் கூடுதலான கௌரவம் சேர்க்கிறது. ரங்கராயன் கோட்டை மதிலில் நின்றவாறே கோபுரத்தைப் பார்த்து வணங்கினான். கையில் பிடித்திருந்த வேல் இன்றைக்கு அதிகமாகக் கனப்பதுபோல் தோன்றியது.




**ப்ளாக் அண்ட் வொயிட் கதைகள்-4**

இருநூற்றைம்பது வருடங்களாக கம்பீரம் குறையாமல் நிற்கிறது வேலூர்க் கோட்டை. சுற்றிலும் ஆழமான அகழி. அகழியில் ஆங்காங்கே தலைதூக்கிப் பார்த்து உள்ளே பாயும் முதலைகள். அவற்றுக்கும் கூட ஏதேனும் அச்சம் உண்டாகியிருக்கலாமோ என்று நினைத்தான்.

விஜயநகரத்து சதாசிவராயரின் கட்டளைப்படி சின்ன பொம்மி நாயக்கர் கட்டிய கோட்டை. பக்கத்திலுள்ள சூரியக் குளத்திலிருந்து நிலத்தடி ஊற்றாகவே அகழியை நிரப்பியதாய்ச் சொல்வார்கள். அதுபோல்

**-சுப்ர.பாலன்**



சூரியக் குளத்தில் ஏராளமான முதலைகள் நூற்றுக்கணக்கில் வளர்ந்து, அவை அகழிக்குக் கொண்டு வரப்பட்டதாகவும் ரங்கராயன் கேள்விப்பட்டிருக்கிறான்.

நாயக்க மன்னர்களிடமிருந்து பிஜப்பூர் சுல்தான், அப்புறம் மராட்டியர்கள் மறுபடியும் கர்நாடக நவாபுகள் என்று பார்த்த கோட்டை. திப்புசுல்தான் குடும்பத்தையே கோட்டைச் சிறையில் அடைத்து வைத்திருக்கிறார்கள். திப்புவின் மரணத்துக்குப் பிறகு ஏழு ஆண்டுகளாகிவிட்டன.

சுல்தான்களோ, நவாபுகளோ, மராட்டியர்களோ - எல்லாரும் இந்தியர்கள் என்றே, சகோதரர்களாக உறவாடிப் பழகிவிட்டார்கள். ஆனால், பிளாஸி யுத்தத்தில் அடியெடுத்து வைத்த அந்நிய தேசத்து வியாபாரிகளின் ஆதிக்கம், படிப்படியாக அரசாங்கமாகவே ஆனது ஒரு வேதனை.

இந்தக் கிழக்கிந்தியக் கம்பெனிக்காரர்களுக்கு முதன்முதலாக ஒரு துண்டு இந்திய பூமியை விற்ற பாவம் வேலூர், சந்திரகிரி ஆட்சியாளர்களையே சேரும்.

எல்லாம் கிடக்கட்டும்; அடி மடியிலேயே கை வைக்கிற மாதிரி கலாசாரத்தையே சிரழிக்கிற முயற்சியாக இந்தக் கம்பெனிக்காரர்கள் நடந்து கொள்வதைத்தான் சகித்துக் கொள்ள முடியவில்லை. ஹிந்துக்கள் நெற்றிக்கு இட்டுக் கொள்ளலாகாது என்றும், முகலாயர்களானால் தாடி மீசை இருக்கக் கூடாது என்றும் கட்டாயப்படுத்துகிறார்கள். சிப்பாயாக வேலை பார்ப்பது கௌரவம் என்று வந்த பலருக்கு இந்த அக்கிரமம் தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கிறது. போதாக் குறைக்கு, சிப்பாய்களுக்குப் புதிதாகத் தரப்படுகிற தொப்பியைக் கூட, பன்றித் தோலில் செய்திருப்பதாய்ச் சொல்கிறார்கள்.

'நம்முடைய வீரமெல்லாம் திப்புவோடு போய்விட்டது. இனிமேல் யாருக்கும் இவர்களை எதிர்க்கத் திராணி இல்லை!' என்று மனம் புழுங்கிச் சொல்லிக் கொண்டிருந்த அப்துல்லா போன வாரம்தான் செத்துப்போனான். முதலைகளுக்கு இரை போடுகிற போது அகழிக்குள் தவறி விழுந்துவிட்டான் என்று சொன்னார்கள். அவனுடைய உடம்புகூடக் கிடைக்கவில்லை. எந்த முதலையின் வயிற்றில் அவன் அடங்கினானோ தெரியாது.

அப்துல்லா நல்ல சிநேகிதன். அவனுக்கு நிக்காஹ் பண்ணுவதற்காகப் பெண் கூடப் பார்த்து ஏற்பாடாகியிருந்தது. பொதுவாக அச்சுத ரங்கராயன் போன்றவர்கள் இஸ்லாமியர்களோடு அதிகம்



நெருங்கிப் பழக மாட்டார்கள். ஆனால், சிப்பாய் வேலைக்கு என்று வந்துவிட்ட பிறகு எல்லாரும் ஒன்றாகத்தான் பழகியாக வேண்டும்.

என்ன காரணத்தாலோ அப்துல்லா ரங்கராயனோடு மிகவும் பிரியத்தோடு பழகிக் கொண்டிருந்தான். அப்துல்லாவின் மறைவை அவனால் அப்படிச் சுலபமாக ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. எத்தனையோ சண்டைகள். எதிலாவது அகப்பட்டுச் சாவது என்பதுதான் போர் வீரனுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. அப்துல்லாவுக்கு அப்படி வீர மரணம்

கிட்டாமல் சூரியக் குளத்து முதலைகளின் வாரிசுகள் செய்து விட்டனவே என்று அவற்றின் மீது கோபம் வந்தது அச்சுத ரங்கராயனுக்கு.

இருள் நன்றாகக் கவிந்துவிட்டது. காவலுக்கு அடுத்த ஆள் வந்து சேர்ந்த வுடன் கொத்தளத்தை விட்டுக் கீழே இறங்கி வந்தான் ரங்கராயன்.

வாகை மரத்தடியில் சிலர் நிற்பது தெரிந்தது அவனுக்கு. ஏதோ ரகசியம் பேசிக் கொண்டிருந்தார்கள் என்பது மட்டும் புரிந்தது. நெருங்கிப் போகத் தயக்கமாயிருந்தது. கொஞ்சம் கிட்டே யிருந்து கவனித்ததில் செத்துப் போன திப்புவின் மகளுக்கு ஆனி மாதம் நிக்காஹ் ஏற்பாடாகியிருப்பது பற்றித் தெரிந்து

*''நீங்கள்*
*வோட்டுப் போட்டாலும் சரி...*
*போடாவிட்டாலும் சரி...*
*வெயில் தாங்க முடியாததால்*
*இத்துடன் பிரசாரத்தை முடித்துக்*
*கொள்கிறேன்!''*

***- எஸ்.ஜெ.கலைவாணி***

கொள்ள முடிந்தது.

ரங்கராயனைப் பார்த்ததும் ஒருவன் இருளில் அவசரமாகக் கலந்து போனான். யார் எத்தனை வேகமாகப் போனாலும் அடையாளம் தெரிந்து கொண்டு விடு வான். ஆனால், இன்றைக்கு அதிர்ச்சியாக இருந்தது. அவனோ? நினைக்கும்போது குடல் எகிறி வருகிற மாதிரி ஒரு அச்சம்.

மற்றவர்களிடம் கொஞ்ச நேரம் பேசினான். நிக்காஹ் தகவலை உறுதி செய்து கொண்டான். ஆனால், அவர்கள் இவனிடம் வேறு எதையும் பேசவில்லை. அவர்களோடு ராமப்பனும், வேலையனும் கூட இருந்தார்கள்.

நெற்றியில் திலகம் வைக்காதே, தாடி மீசையை வளர்க்காமல் ஒழுங்கு செய் என்றெல்லாம் மதாசாரங்களில் குறுக் கிடுகிற புதிய சட்டம். போன கார்த்திகை மாசம்தான் நடைமுறைக்கு வந்தது. முருக பக்தர்கள் சிலர் திருநீறு பூசிக் கொண்டு வேலைக்கு வந்தது வம்பாகிவிட்டது.

புதிய சட்டத்தை எதிர்த்து முறையிடு வதற்காகச் சென்னைப் பட்டணத்துக்குப் போன சில சிப்பாய்களும் அகப்பட்டுக் கொண்டு தண்டனை பெற்றார்கள். ஒரு இந்து இளைஞனும் ஒரு இஸ்லாமிய இளைஞனும் ஆளுக்குத் தொள்ளாயிரம் கசையடி தண்டனை பெற்றதோடு, அவர் களின் வேலையும் பறிபோனது. இன்னும் பத்தொன்பது பேருக்கு ஐநூறு கசையடி தண்டனை மட்டும் தந்து, மன்னிப்புக் கடிதாசில் கைநாட்டு வாங்கிக் கொண் டார்கள். எல்லாம் நடந்து நாற்பத்தைந்து நாட்கள்தானிருக்கும்.

சிப்பாய்கள் உள்ளுக்குள்ளேயே புழுங் கிக் கொண்டிருந்தார்கள் என்று சொல்ல முடியாது. ஏதோ வலுவான திட்டம் உரு வாகிக் கொண்டிருந்தது. 'எப்படியாவது திப்புசுல்தானின் பிள்ளைகளை மறுபடியும் ஆட்சியில் அமர்த்திவிடுவோம். நீயே பாரேன்!' என்று கூட அப்துல்லா சொல்லி யிருக்கிறான்.

அச்சுத ரங்கராயனுக்கு இவர்கள் மாதிரி துணிச்சல் கிடையாது. மௌனமாக வீட்டுக்குப் போனான். கிழவி வற்புறுத் தியும் சாப்பிடப் பிடிக்கவில்லை செத்துப் போன அப்துல்லாவின் முகம் கண்முன் னாலேயே வந்து நின்று சிரிப்பது போலி ருந்தது.

அதிரடியாக எல்லாம் நடந்தது. திப்பு மகள் கல்யாணத்துக்குப் போகிறோம் என்கிற சாக்கில், முன்னாலேயே திட்ட மிட்டிருந்தபடி திமுதிமுவென்று கோட் டைக்கு முன்னால் வீரர்கள் கூடினார்கள்.

அச்சுதனையும் விடாப்பிடியாக இழுத்துக் கொண்டு போனான் வேலையன். இவர்களுக்காகக் காத்திருந்த நண்பர்களின் கூட்டத்தில் அப்துல்லா! முதலை வாயில் போனான் என்று கதை கட்டிவிட்டு எல்லா ஏற்பாடுகளையும் அவன்தான் கவனித்தானா? அன்றைக்கு மரத்தடி நிழலில் மறைந்தவன் இவன்தானா என்று சந்தேகப்பட்டது உறுதியாகிவிட்டது.

''அவுதுல்லா! ஏங்கிட்டக் கூட மறைக்கணுமா?'' என்று கேட்டதற்குப் பதிலாக அவனுடைய புன்னகை! ஆதரவாக அருகே வந்து தோளில் தட்டிக் கொடுத்தான்.

இருள் கனத்து நள்ளிரவு தாண்டு

**"அச்சுதரங்கராயன் வானத்தை நோக்கி இரண்டு கரங்களையும் உயர்த்திக் கதறினான்... 'அவுதுல்லா!'"**



கிறவரை ஆங்காங்கே அமைதியாகக் குழுக்களாக நின்றவர்கள் அதிரடியாகக் கோட்டைக்குள் புகுந்தார்கள். வெள்ளைச் சிப்பாய்கள் உட்பட இருநூறு பேருக்கு மேல் செத்துப் போனார்கள். வேலூர்க் கோட்டை இந்தியர்களின் வசமாகி விட்டது. மைசூர் சுல்தானின் கொடியையும் அந்த நள்ளிரவு கடந்த நேரத்திலேயே கொடிமரத்தில் ஏற்றி ஆரவாரம் பண்ணினார்கள். திப்புவின் இளைய மகனையே அரசனாகவும் பிரகடனம் செய்தாகி விட்டது.

ஆரவாரத்தின் இடையே ஒரு வெள்ளை அதிகாரி, கோட்டைக்கு வெளியே தப்பியோடியதைக் கவனிக்காமல் விட்டுவிட்டார்கள். அவன் ஓடிப் போய் ஆற்காடு பாசறைக்குத் தகவல் தந்து, அங்கிருந்து சென்னைப் பட்டணத்துக்கும் செய்தி போய் -

ஒன்பது மணி நேரத்தில் மீண்டும் வேலூர்க் கோட்டை கம்பெனியார் கையில் வந்தது. இந்தியர்கள் ஐநூறு பேருக்குமேல் செத்துப்போனார்கள். பலருக்குப் படுகாயம். கலவரம் ஓய்ந்தது என்றார்கள். சிறையிலிருந்த திப்புவின் குடும்பத்தையும் கல்கத்தாவுக்குக் கொண்டுபோய்விட்டார்களாம்.

அச்சுத ரங்கராயன் அப்புறம் வேலைக்குப் போகவே இல்லை. கலவரம் நடந்து நான்கு நாட்களுக்குப் பிறகு அகழியில் கரை ஒதுங்கிக் கிடந்த சடலங்களுள் அப்துல்லாவும், ராமப்பனும் இன்னும் நண்பர்கள் சிலரும் இருந்தார்கள்.

அப்துல்லா நிஜமாகவே செத்துப் போய் விட்டான் என்பதைக் கண்ணாலேயே காண நேர்ந்த கொடுமையால் அச்சுத ரங்கன் நிலைகுலைந்து போனான். கன்னத்தில் கைவைத்தபடி வீட்டு வாசலில் வானத்தையே வெறித்துப் பார்த்தவாறு அமர்ந்திருந்த அவனிடம் ஓடிவந்து சேதி சொன்னான் இருசப்பன்.

''அண்ணே! அந்த விவகாரமான சட்டத்தை எடுத்துட்டாராம் கவர்னர் துரை. இந்தமாதிரி விஷயங்களிலேயே நாம தலையிடக் கூடாதுன்னு கம்பெனிக்காரங்க முடிவு பண்ணிட்டாங்களாம்... சவுக்கடி தண்டனை கூட இருக்காதாம்...''

அச்சுத ரங்கராயன் பித்துப்பிடித்த மாதிரி எழுந்து நின்று சிரித்தான். வானத்தை நோக்கி இரண்டு கரங்களையும் உயர்த்திக் கதறினான். ''அவுதுல்லா...!''

யாருக்கு வேண்டும் இந்தச் சட்டங்களும், பரிகாரங்களும் என்று கேட்பது போல் இருந்தது அவனுடைய கோபம்!

# ஆனந்த தாண்டவம்



எழுத்தாளர் சுஜாதாவின் வெற்றிக் கதையான பிரிவோம் சந்திப்போம் நாவலைத் தழுவி எடுக்கப்பட்டுள்ள படம் ஆனந்த தாண்டவம். தான் உயிருக்குயிராய் நேசிக்கும் காதலி, தன்னைக் கைவிட்டு வேறொரு மாப்பிள்ளையோடு அமெரிக்காவில் செட்டிலாகிறாள். தன்னைப் புறக்கணித்த காதலியின் முன் ஜெயித்துக்காட்ட அமெரிக்கா சென்று மேற்படிப்பைத் தொடர்கிறான் கதையின் நாயகன். அங்கு வேறொரு அமெரிக்க தமிழ்ப் பெண்ணோடு கிடைக்கும் நட்பின் மூலமாக, தன் பழைய காதலியைச் சந்திக்கிறான். இந்த மூவருக்குள் ஏற்படும் உறவுச் சிக்கல்களை மையமாக வைத்து மிக அழகாகப் படம் பிடித்திருக்கிறார் இயக்குநர்.

முதல் காட்சியிலேயே நாயகன் தற்கொலை செய்து கொள்வது நம்மை நிமிர்ந்து உட்கார வைக்கிறது. தமன்னா இறுதிக் காட்சியில் நம் இதயத்தை உருக வைத்து விடுகிறார். 'மனசா... அது எங்க இருக்கு?' எனக் கேட்டு காதலனிடம் புரியாமல் விழித்து கெஞ்சும்போது நடிப்பில் முதிர்ச்சி. அறிமுக நாயகன் சித்தார்த்துக்கு சினிமாவில் நல்லதொரு தொடக்கம். நாயகனின் தந்தையாக வருபவர், அவர் வீட்டுக்கு கைக்குழந்தையோடு வந்து போகும் பெண் போன்றவர்களின் பாத்திரப்படைப்பு அசத்தல்.

படத்தின் இரண்டாவது பகுதி முழுக்க அமெரிக்காவில் படமாக்கப்பட்டுள்ளது. 'முதுகெலும்பு இல்லாத இவங்களுக்காக ஏம்மா அழுவுறீங்க?' 'வாழணும்னு ஆசைப்படு வலியே தெரியாது' போன்ற சுஜாதாவின் வசனங்கள் படத்தில் பளிச்... பளிச். ஜீவா சங்கரின் ஒளிப்பதிவு கூடுதல் பலம். ஜி.வி. பிரகாஷ்குமாரின் இசையில் 'கனா காண்கிறேன் கனா காண்கிறேன் கண்ணா...' பாடல் முடிந்த பின்பும் நித்யஸ்ரீ குரல் காதில் கேட்டுக் கொண்டேயிருக்கிறது. கதையின் இரண்டாம் பகுதியின் நீளத்தைக் குறைத்திருந்தால் **ஆனந்த தாண்டவம்... இதயத்தில் இனித்திருக்கும்.**

**- ப்ளாக்**

**ஃபேஷன் ஃப்ரூட்**

# ஒரு நாளைக்கு ரெண்டு பழம்!

"காலத்துக்கு ஏற்றாற் போல ஃபேஷன் மாறுற மாதிரி பழங்களும் மாறுது ஸார். நம்மூர் பொட்டிக்கடையில வாழைப்பழம் மாதிரி. கர்நாடகா பூரா ஃபேஷன் ஃப்ரூட் பெட்டிக்கடைகள்லயும் கெடைக்கும். ஜூஸ் கடையிலும் விக்கும். இது விளையற துக்கு மலைப் பிரதேசம் முக்கியம். சமவெளித் தோட்டத்துல இதை சாகுபடி செய்ய ஏலாது. இப்பத்தான் நம்ம தமிழ்நாட்டுப் பக்கம் லேசா எட்டிப் பார்த்திருக்கு'' என்கிறார் மங்களம் கொம்பு மலைக்கிராம விவசாயி கணேசன்.

''இது பழ வகைகள்ல கொடி இனத்தைச் சேர்ந்தது. ஒரு கொடி நட்டு வெச்சா போதும். நாலா பக்கமும் படரும். ஒரு செண்ட்க்கு ரெண்டு கொடி. ஒரு ஏக்கருக்கே இருநூறு கொடி. ரொம்பத் தண்ணி தேவையில்லை. அடியுரம் இட்டா போதும். பராமரிப்புச் செலவு ரொம்பக் கம்மி. லாபமோ அமோகம்'' என்றார்.

திண்டுக்கல் மாவட்டம், கீழ்ப்பழனி மலைத்தொடர்ச்சி மலைக்கிராமங்களில் விளைவிக்கப்படுகிறது ஃபேஷன் ஃப்ரூட். சுமார் நான்காயிரம் அடி உயர மலைத் தொடர் தோட்டங்களில் இது பயிரிடப் பட்டுள்ளது. தாண்டிக்குடி, மங்களம் கொம்பு, பண்ணைக்காடு, கானல்காடு, பாச்சலூர், தடியன் குடிசை, சொக்கன் காடு போன்ற மலைக்கிராமங்களில் இது பயிர் செய்யப்பட்டுள்ளது. இங்கிருந்துதான் கொடைக்கானலுக்கும், மற்ற நகரங்களுக்கும் செல்கிறது ஃபேஷன் ஃப்ரூட்.

''நாட்டுப் பழ வகையான இது வரை ரொம்பக் குளிரும் ஒத்துக்காது. ரொம்ப வெப்பமும் ஆகாது. ரெண்டும் மிதமா இருக்கணும்! அதுக்கு மலைப்பிரதேசம் தான் தோதானது. நட்டதிலேர்ந்து ஒரு வருஷம் கழிச்சு பலன் தர ஆரம்பிக்கும். வாரம் ஒருமுறை பழம் பறிக்கலாம். இப்படி தொடர்ந்து நாலு வருஷத்துக்கு

"தேர்தல் பொதுக்கூட்டத்தில் பேசிக்கொண்டு இருந்த தலைவரை ஏன் மக்கள் துரத்துறாங்க?"

"இனி நாட்டில் மின்சார வெட்டே இருக்காதுன்னு சொன்ன உடனே, எல்லா விளக்குகளும் அணைஞ்சுட்டதாம்!"

- வி.ஜி. சத்தியநாராயணன்

பழம், நல்ல விளைச்சலா தரும். அப்புறம் மாற்றுப் பயிர் ஒண்ணு பண்ணிட்டு திரும் பவும் ஃபேஷன் ஃப்ரூட் சாகுபடிக்கு வந்திடலாம்.



✱ கணேசன்





✱ கிருஷ்ணமூர்த்தி



கர்நாடகாவுல பரவலா கெடைக்கற மாதிரி, இது தமிழ்நாட்டுல கெடைக்கல. ஃபேஷன் ஃப்ரூட் தமிழ்நாட்டுல பரவ லாக்கப்படணும். ஆரஞ்சுப் பழ சைஸுக்கு இருக்கும் இது. பழமாகும் போது அதனோட மேல் தோலு ஓடு மாதிரி கெட்டியாகிடும். ரெண்டா பிளந்தோம்னா உள்ளே இளம் பச்சை கலர்ல கூழ் மாதிரி பழுத்து இருக்கும். அப்படியே வாய் வெச்சு உறிஞ்சி சாப்பிடலாம். ஒரு நாளைக்கு அதிகபட்சமா ரெண்டு பழம் சாப்பிட்டாலே போதும். இரத்தக் கொதிப்பை யும் சர்க்கரை நோயையும் கட்டுப்பாட்டுல கொண்டு வந்திடும். ஆஸ்துமாவை அலறி யடிச்சு ஓட வைக்கும். மூச்சி ரைப்பு, இருமல் போன்ற நோய் களுக்கு நோ என்ட்ரி. வைட் டமின் ஏ, பொட்டாஷியம் இதில் அதிகம். மொத்தத்தில் மருத்துவக் குணங்கள் நிறைந் தது ஃபேஷன் ஃப்ரூட்!'' என்கிறார் தோட்டக் கலை அலுவலர் ஒருவர்.

''எனக்கு ஒரே ஒரு பழம்தான் கெடைச் சது. அதுல விதை எடுத்து நாற்று பாவி இப்போ என்னோட எட்டு செண்ட் தோட்டத்துல இந்தப் பழம் போட்டிருக் கேன். ஒரே கல்லுல ரெண்டு மாங்காய் மாதிரி, குடும்பத்தோட பழத்தைச் சாப்பிட்டு நோயை விரட்டலாம்; இல்ல பழங்களை வித்து வீட்டுக்கு வான்னு பணத்தைக் கூப்பிடலாம். பழ மாகவும் ஜூஸாகவும் விற்கிற இந்தப் பழத்தை மலைக் கிராமங்கள்ல சாகுபடி செய்ய காத்துக் கணக்கா ஆசை பரவுது'' எனச் சொல்கிறார் மங்களம் கொம்பு கிருஷ்ணமூர்த்தி.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

''அந்த வேட்பாளரைத் தலைவர் ரொம்ப திட்டிட்டாரா! ஏன்?''
''தேர்தல் செலவு எவ்வளவு செய்வேன்னு கேட்டதுக்கு, எவ்வளவு கொடுத்தாலும் செய்வேன்னாராம்!''

**- தென்றல் சண்முகசுந்தரம்**



'நீயெல்லாம் படிச்சு என்னடா கிழிக்கப் போறே?'

இந்த வசனத்தை உச்சரிக்கிற பெரியவர்கள் இன்றைக்கும் இந்தியக் கிராமங்களில் இருக்கிறார்கள். அவர்களுக்கு எதிர்காலம் பற்றிய கவலை இல்லை. தங்கள் குழந்தைகளாலும் உயரங்களை எட்ட முடியும் என்று அவர்கள் நம்புவதில்லை. அப்படிப்பட்ட தந்தையால் பாதிக்கப்படுகிற ஒருவனின் கதைதான் 'மாடசாமி 2-ம் வகுப்பு 'ஆ' பிரிவு' என்ற குறும் படம்.



★ வேலாயுதம்



குடித்துவிட்டு சதா சீட்டாடுகிற அப்பா, மாடசாமியின் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார். அவன் படிப்பு இரண்டாம் வகுப்போடு நின்று போகிறது. மாடு மேய்க்கப்

# முத்து டாக்டர்

போகிறான். படிக்க வேண்டும் என்கிற தீராத வேட்கை பெரும் ஏக்கமாக வாழ்நாளெல்லாம் அவன்கூடவே வருகிறது.

அப்பா மாடசாமியின் எதிர்கால நம்பிக்கையே மகன் முத்துதான். அவன் கேட்கிறதையெல்லாம் வாங்கிக் கொடுக்கிறார். வெகுதூரம் இருக்கிற பள்ளிக்கூடத்துக்கு நடந்து போனால் கால் வலிக்கிறது என்று சொன்னதற்காக ஒரு சைக்கிள் வாங்கித் தருகிறார்.

சாப்பாட்டுக்கே வழியில்லாதபோதும், கடன் வாங்கி முத்துவை நகருக்கு அனுப்பிப் படிக்க வைக்கிறார் மாடசாமி. முத்து, தந்தையின் உணர்வுகளையும் கஷ்டங்களையும் புரிந்து வளர்ந்தவன். நன்றாகப் படித்து டாக்டர் பட்டம் பெற்றுவிட்டு, ஊருக்கு வருவதாகக் கடிதம் எழுதுகிறான்.

சந்தோஷத்தில் துள்ளிக் குதிக்கிற மாடசாமி, ஊரெல்லாம் முத்து டாக்டராகிவிட்டதைச் சொல்லிப் பெருமைப்படுகிறார். பஸ் ஸ்டாண்டில் மகனுக்காகக் காத்திருக்கிறார். பழைய நினைவுகளை அசை போடுகிறார். முத்து பஸ்ஸில் இருந்து இறங்கும்போது, பரவசத்திலேயே அவர் உயிர் பிரிந்து போயிருக்கிறது.

கிராமத்தையும் கிராமத்து மனிதர்களையும் அதன் இயல்பு குறையாத அழகோடு வாரிக் கொட்டுகிறது. ஏ.ஜே.எம். ஜமாலின் ஒளிப்பதிவு. பொருத்தமான, உறுத்தாத




# வர்றார்!

இயக்குநராகப் பணியாற்றி வருகிறார்.

''உங்களுக்கு இந்தக் கதையைக் குறும்படமாக எடுக்க வேண்டும் என்று ஏன் தோன்றியது?'' எனக் கேட்டால், ''என் வாழ்க்கையில் எனக்கு ஏற்பட்ட பெரும் பாதிப்புதான் இந்தப் படத்தை எடுக்கத் தூண்டியது'' என்கிறார்.

இன்றைய சூழலில் குறும்படம் எடுக்கிறவர்களில் நிறைய பேர் ஆத்ம திருப்திக்காக எடுக்கிறோம் என்கிறார்கள். அதுபற்றிக் கேட்டால், ''இது ஒரு சுயசோதனை. ஒரு நல்ல மெஸேஜை எல்லாருக்கும் சொல்லணும்னு நினைச்சேன். சொல்லிட்டேன். டெக்னிக்கலா சில தவறுகள் இருந்தாலும் நான் என்ன தப்பு செஞ்சேன்னு எனக்கு இப்போ தெரியுதில்ல?'' என்கிறார் வேலாயுதம்.

இந்தக் குறும்படத்தைத் தயாரிப்பதற்கு வேலாயுதத்தின் தங்கை வீட்டுக்காரர் முத்து செல்வன் பண உதவி செய்திருக்கிறார். மொத்தச் செலவு முப்பதாயிரம் ரூபாய். அதற்குப்



இசையைத் தந்திருக்கிறார் ஞான அன்பு ராஜ்.

உணர்ச்சி ததும்பும் ஒரு கதையைக் குறும்படமாக்குவது சவாலான காரியம். அதுவும் குறைந்த முதலீட்டில், எத்தனையோ பிரச்னைகளுக்கு மத்தியில்தான் இப்படிப் பட்ட குறும்படங்களைத் தயாரிக்க வேண்டியிருக்கிறது. 'மாடசாமி 2-ம் வகுப்பு 'ஆ' பிரிவு படத்தை மிகச் சிறப்பாக எடுத்திருக்கிறார் இயக்குநர் வேலாயுதம்.

தென்காசியைச் சேர்ந்த வேலாயுதம், கடந்த ஐந்தாண்டுகளாக திரைப்படத் துறையில் முன்னுக்கு வரத் துடிப்பவர். தற்போது இயக்குநர் விஜயசேகரின் 'சரஸ்வதி மேல்நிலைப்பள்ளி' என்ற திரைப்படத்தில் உதவி

பலனில்லாமல் இல்லை. சென்னை ஃபிலிம் சேம்பரில் நடந்த மூன்றாவது சர்வதேசக் குறும்பட விழாவில் சிறந்த திரைக்கதைக்கான விருதைப் பெற்றிருக்கிறது இந்தப் படம்.

ஒரு காட்சியில் மாடசாமி முத்துவிடம் இப்படிச் சொல்வார்: 'உனக்குக் கிடைச்ச மாதிரி எனக்கு ஒரு நல்ல அப்பா கிடைக்கலப்பா!' அந்தக் குரல் வெகு நேரத்துக்கு நமக்குள் ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

**– கே. பாலசுப்ரமணியன்**

பீகாரில் முதல் கட்டத் தேர்தலின் போது 46 சதவிகித வாக்குப் பதிவு நடந்தது. இரண்டாம் கட்டத்தில் அது 44 சதவிகிதமாகக் குறைந்தது. பா.ஜ.க கூட்டணி, லாலு-பஸ்வான் கூட்டணி இரு தரப்பினருமே, குறைந்த அளவு வாக்குப் பதிவு காரணமாக ஜெயிக்கப் போவது தாங்கள்தான் என்று மார் தட்டுகிறார்கள். வாக்குப் பதிவு குறைய என்ன காரணம்? கடுமையான கோடை வெயில், ஏராளமான ஏழை மக்கள் வேலை தேடி அயல் மாநிலங்களுக்குப் போய்விட்டது மட்டுமல்ல. தேர்தல் கமிஷனின் தீவிரக் கண்காணிப்பு காரணமாக லாலுக்கள் வாக்குச் சாவடிகளில் தங்கள் கைவரிசையைக் காட்ட முடியவில்லை. எனவே, உண்மையான வாக்குப் பதிவு, முந்தைய தேர்தல்கள் அளவுக்கு இல்லாமல் குறைந்துவிட்டது! *(அப்படிப் போடு அருவாளை!)*

# சிதம்பரத்துக்கு 27 கோடி!



● எகிறும் கோடிகள்



● ஊசலாடும் நாற்காலி

இரண்டு கட்டங்களாக ஆந்திராவில் சட்டசபை மற்றும் பாராளுமன்றத் தேர்தல் முடிந்துவிட்டது. சிரஞ்சீவி முதலமைச்சராவது சாத்தியமில்லை என்பது தெரிந்துவிட்டது. ஆனால், அவரது ஆதரவு பெற்றவரே முதலமைச்சர் ஆக முடியும் என்று சொல்கிறார்கள். தேர்தலுக்கு முந்தைய சில நாட்களில், சிரஞ்சீவி திருப்பதியில் ஒரு ஓட்டலில் வாக்காளர்களுக்குக் கொடுப்பதற்காக கோடிக்கணக்கில் பணம் கொண்டு வந்து வைத்திருப்பதாகத் தகவல் பரவ, அது வீண் வதந்தி என்று தெரிய வர, அதன் காரணமாகவே சிரஞ்சீவிக்கு ஏகப்பட்ட அனுதாப வோட்டுக்கள் விழுந்தனவாம். *(அப்ப சிரு ஹீரோவா? வில்லனா?)*

பா.ஜ.க.வின் பிரதமர் வேட்பாளர் அத்வானிகூட இந்தத் தேர்தலில் இதுவரை 200 பிளஸ் பிரசாரக் கூட்டங்களில்தான் பேசி இருக்கிறார். ஆனால், அவரைவிட அதிக ஸ்கோர் அடித்திருப்பவர் நரேந்திரமோடிதான்! மோடியின் ஸ்கோர் இரண்டரை

செஞ்சுரி! இந்தத் தேர்தல் சீசனில் மூணு செஞ்சுரி அடித்துவிடுவார் என்கிறார்கள் காவிக்காரர்கள். (அப்ப அடுத்த பிரதமர் வேட்பாளர் மோடி தான்!)




கோடி. இப்போது 27 கோடி! அவர் அளித்துள்ள சொத்துப் பட்டியலில் ரூ.995 மதிப்புள்ள கைனெடிக் ஹோண்டா ஸ்கூட்டரும் அடக்கம். (பாவம்! ஒரு புது ஸ்கூட்டர் வாங்கிக் கொடுங்கப்பா!)

**பா**ராளுமன்றத்தின் சபாநாயகர் பதவி வகித்த மனோகர் ஜோஷி, துணை சபா நாயகர் பி.எம். சையீத் இருவருமே 2004 பாராளுமன்றத் தேர்தலில் தோல்வி கண்டனர். கடந்த பாராளுமன்ற சபா நாயகர் சோம் நாத் சாட்டர்ஜிக்கு இந்தத் தேர்தலில் ஸீட் தரப்படவில்லை. எனவே சபாநாயகர்களே ஜாக்கிரதை! (அது சரி, நம்ம வானளாவிய அதிகார ஆசாமியோட சம்சாரம் பாராளு மன்றம் போறாங்களா பார்ப்போம்!)



* மூணு செஞ்சுரி



* தலைப்பாகை செண்டிமெண்ட்...



* சபாநாயகர் ஷாக்...

**ந**ம்ம ப.சிதம்பரத்தின் சொத்து மதிப்பு எவ்வளவு தெரியுமா? 2004ல் பதினேழு

**ம**த்திய அமைச்சரும், ம.பி.யில் குணா தொகுதி வேட்பாளருமான ஜோதிர் ஆதித்திய சிந்தியா பிரசாரத்தின்போது மாலைகளை ஏற்றுக் கொள்ள மறுத்து விடுகிறார். கையில் ஒரு கறுப்புநிறப் பட்டை அணிந்து கொண்டிருக்கிறார், காரணம்: அவரது கட்சியைச் சேர்ந்த எம்.எல்.ஏ. ஒருவர் அண்மையில் கொல்லப்பட்டார்; அந்தக் கொலையில் சம்பந்தப்பட்டவர்களை ம.பி.யை ஆளும் பா.ஜ.க முதலமைச்சர் பாதுகாக்கிறார் என்பது சிந்தியாவின் குற்றச்சாட்டு! (எதிர்ப்பு - சிந்தியா ஸ்டைல்!)

## அக்கம் பக்கம்

**ரா**ஜஸ்தானின் ஜோத்பூர் பகுதியில் பிரசாரத்துக்கு வருபவர்கள் அனைவரும் பாரம்பரிய ராஜஸ்தானிய தலைப்பாகை அணிந்துகொண்டு வந்தால் எளிதில் வாக்காளர்களைக் கவரலாம் என்று நினைப்பதால், பாரம்பரிய ராஜஸ்தானிய தலைப்பாகைகளுக்கு ஏக டிமாண்டு! (இப்போ தங்களுக்கு தலைப்பாகை! அப்புறம் வோட்டுப் போட்டவங்களுக்கு குல்லாவா?)

– பரத் ராம்

வெயிலை, மகாகவி பாரதி 'சூரியப் பதார்த்தம்' என்று குறிப்பிட்டு உணவுப் பட்டியலில் சேர்த்திருக்கிறார். உயிர்ச்சத்து நிரம்பிய வெளிச்சத்தைத் தனக்குள் குழைத்து, தனக்கான உணவைத் தயாரித்துக் கொள்கின்றன தாவரங்கள். இந்த வெயிலை மனிதர்கள் எவ்வகையிலேனும் நமக்கானதாய் மாற்றிக் கொள்ள முடியுமா என யோசித்தனர். விளைவு மலிவு விலையில் தண்ணீரைச் சூடாக்கவும், வீட்டுக்கு மின்சாரமாக மாற்றவும் முடியும் என்று நிரூபிக்க முயன்று வெற்றியடைந்துள்ளார்கள் வேலூரைச் சேர்ந்த எஸ்.பி.ஜானகிராமனும் அவர் மகன் ஜே.சடகோபனும். இந்த வேலூர் விஞ்ஞானிகளைச் சந்தித்தபோது...

*எப்படி இந்த ஐடியா தோணிச்சு?*

''ஒருமுறை வாட்டர் ஹீட்டர் வாங்க கடையில் விலை கேட்ட போது 'பக்'னு ஆயிடுச்சு. நான் ஒரு என்ஜினியர். என் மகனும்தான். ஏன் நாமளே மலிவு விலையில் எந்தக் காலத்துக்கும் பஞ்சமில்லாத நம் நாட்டு வெயிலை யூஸ் பண்ணி, ஒரு சோலார் வாட்டர் ஹீட்டர் செய்யக் கூடாதுன்னு தோணிச்சு. இரண்டு வருட ஆராய்ச்சிக்குப் பின் ஜெயிச்சுட்டோம். வீடுகளில், ஐம்பது லிட்டர் ஹீட்டர் அமைக்க மூவாயிரம் ரூபாயும், நூறு லிட்டர் ஹீட்டர் அமைக்க பத்தாயிரம் ரூபாயும்தான் செலவாகும். அதுவும் கரண்ட் தேவையில்லை. வெயில் போதும்.''

*மலிவு விலையில் கொடுக்க எப்படி முடிஞ்சது! உங்க லேப் எங்கே இருக்கு?*

''பிரத்யேகமான ஆராய்ச்சிக்கூடம் எதுவும் கிடையாது. எங்க வீட்டின் கூடம் (மையப்பகுதி)தான் ஆய்வுக்கூடம். வீட்டுப் பொருட்களோடு எங்க ஆய்வுப் பொருட்களும் சிதறிக் கிடக்கும். ஆனால் இலட்சியம் சிதறாம ஒன்னா இருக்கும். இது தனி மனுஷ வெற்றியல்ல - குடும்ப வெற்றி. எல்லா குடும்பங்களிலும் வேணான்னு தூக்கி குப்பையில் எறியும் ஒரு பொருளைத்தான் எங்க ஆய்வின் மூலப் பொருளா மாத்தினோம். அதனால ஹீட்டரை மலிவா கொடுக்க முடியுது. இது இன்னும் மூணு மாசத்தில் விற்பனைக்கு வந்துடும்.''

# வெயில்லை



* எஸ்.பி. ஜானகிராமன்



* ஜே.சடகோபன்

*இந்த ஹீட்டரை வைக்க ரொம்ப இடம் வேணுமா? எவ்வளவு நேரத்தில் வெந்நீர் ரெடியாகும்?*

''மொட்டைமாடி மேல் 6 அடிக்கு 4 அடி இடம் இருந்தா போதும். இந்த




***"இந்தத் தொகுதியில நிற்க உங்களுக்கு என்னென்ன தகுதி இருக்கு?"***

***"இதே தொகுதியில ஏற்கெனவே பல தடவை பல கட்சி சார்பா நின்னிருக்கேன்."***

***- ஆனந்த் சீனிவாசன்.***

சோலார் வாட்டர் ஹீட்டரை அமைச்சிட லாம். 40°C வரையுள்ள சூரிய வெளிச்சம் (வெயில்) இருந்தா, 65°C வரையில் தண்ணீரைச் சூடாக்க முடியும். மந்தாரமாக இருக்கும் மார்கழி மாசத்தில் 3 மணி நேரம், கோடைகாலத்தில் ஒரு மணி நேரம் போதும். தண்ணீர் சூடாக ஆரம்பிச்சுடும். 16 மணி நேரம் வரை இந்தத் தண் ணீரை சூடு குறையாம டேங் கில் சேமிச்சு வைக்கலாம். ஒரு இடத்திலிருந்து இன் னொரு இடத்துக்கு அதிகச் செல வின்றி மாற்றிக் கொள்ள முடியும்.''

*இதை சிறு தொழிலாகச் செய்ய வேறு யாருக்காவது சொல்லித் தருவீங்களா?*

''நிச்சயமா! இந்தத் தொழில்நுட்பத் தைக் கத்துக்கிட்டு சிறு தொழிலா மலிவு விலை வாட்டர் ஹீட்டரைச் சந்தைப்படுத்த விரும்பினால் எங்களை அணுகலாம். பத்து வருடம் வரை வேலை செய்யும் இந்த ஹீட்டரைச் செய்யும் முறையைக் கத்துத் தருவேன்.''

*அரசாங்கம் இதை ஆதரிக்குதா? அடுத்து என்ன பண்றதா உத்தேசம்?*

"VIT-TBI குழுமம் எனர்ஜி புரொபஸர் ஆர்.நடராஜனும், TBI-GM பாலசந்தரும், DSIR விஞ்ஞானி ராகுலும் மற்றும் கவிதா ஆகியோரும் ஆய்வு செய்து பரிந்துரை செஞ்சதால மத்திய அரசு இந்தக் கண்டு பிடிப்புக்கு மூன்றரை லட்சம் மான்யம் தந் திருக்கு. அந்த உற்சாகத்தில் ஒவ்வொரு வீட்டிலேயும் பொருத்திக் கொள்கிற, சூரிய வெளிச்சத்திலிருந்து மின்சாரம் தயாரிக்கிற மெஷினை ஆறு மாசத்தில் கண்டுபிடிச்சிடு வோம். ஆய்வு நடந்துக்கிட்டு இருக்கு. வீட்டுக்கு வீடு சூரிய கரண்ட். இதுதான் லட்சியம்.''

பொறந்தா புகழோட இருக்கணும்னு வள்ளுவர் சொன்னதை வேலூர் தமிழர்கள் கத்திரி வெயிலாட்டம் 'சுர்'னு உறைக்கிறா மாதிரி செஞ்சு காமிச்சுட்டாங்களே! சபாஷ்.

**- அமிர்தா**

# குளிக்கலாம் வாங்க!



● சோலார் வாட்டர் ஹீட்டர்

"நான் சொன்னேன்ல அவர்கிட்ட பிளாக் மணி அதிகமா இருக்குன்னு..."
"அதுக்காகத் தேர்தல்ல நிற்க பிளாக்ல டிக்கெட் கிடைக்குமான்னு கேட்கிறது...?"

**- சொக்கம்பட்டி தேவதாசன்**

**வீ**ரநாராயண ஏரிக் கரையின் தென் கோடிக்கு வந்தியத்தேவன் வந்து சேர்ந்தான்.

அன்று பதினெட்டாம் பெருக்குத் திருநாள் அல்லவா? பக்கத்து கிராமங்களிலிருந்து, தந்த நிறத் தென்னங்குருத்துகளால் சப்பரங்கள் கட்டி இழுத்துக் கொண்டு கும்பல் கும்பலாக மக்கள் அங்கே வந்து கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் புதிய ஆடைகள் அணிந்து, விதவிதமான அலங்காரங்கள் செய்து கொண்டு வந்திருந்தார்கள். பெண்களின் கூந்தல்களைத் தாழம்பூ, செவ்வந்திப் பூ, மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம் முதலிய மலர்கள் கொத்துக் கொத்தாய் அலங்கரித்தன. கூட்டாஞ்சோறும், சித்திரான்னமும் எடுத்துக் கொண்ட பலர் குடும்பங் குடும்பமாக வந்திருந்தார்கள். சிலர் ஏரிக்கரையில் தண்ணீர் ஓரமாக நின்று கொண்டு, சித்திரான்னம் முதலியவற்றைக் கமுகு மட்டைகளில் போட்டுக் கொண்டு உண்டார்கள். இன்னும் சில தைரியசாலிகள் சிறிது தூரம் தண்ணீரில் நடந்து சென்று வடவாற்றங்கரையை அடைந்து அங்கு நின்றபடி



சாப்பிட்டார்கள். குழந்தைகள் சிலர் சாப்பிட்ட கமுகு மட்டைகளைக் கணவாய்களின் ஓரமாய் எறிய, அந்த மட்டைகள் கணவாய்களின் வழியாக ஏரிக்கரைக்கு வெளியே விழுந்தடித்து ஓடிவருவதைக் கண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். ஆடவர்களில் சில வம்புக்காரர்கள் தங்கள் காதலிகள் கூந்தலில் சூடியிருந்த மலர்களை, அவர்கள் அறியாமல் எடுத்துக் கணவாய் ஓரத்தில் விட்டு ஏரிக்கரைக்கு மறுபக்கத்தில் அவை ஓடி வருவதைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டு சிறிது நேரம் வல்லவரையன் அங்கேயே நின்று கொண்டிருந்தான். அங்கு நின்ற பெண்களில் இனிய குரலையுடைய சிலர் பாடுவதையும் காது கொடுத்துக் கேட்டான். அவர்கள் ஓடப் பாட்டும், வெள்ளப் பாட்டும், கும்மியும் சிந்தும் பாடினார்கள். மிகுந்த குதூகலத்துடன் பாடினார்கள்.

வந்தியத்தேவன் செவிகளில் இன்ப வெள்ளமாகப் பாய்ந்தன.

– 'பொன்னியின் செல்வன்'
முதல் அத்தியாயத்திலிருந்து...

# பதினெட்டாம் பெருக்கு



**காற்று வரும் பருவம்!**

**15**

ஒவ்வொரு நாளும் காலை ஒரு விதப் பீதியுடன்தான் விடிகிறது. வீட்டு வாசல்களிலும் கடைத் தெருவிலும் கூடிக்கூடிப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். எவனோ ஒருவன் வைத்துப் போன உலை, ஊர் முழுக்கக் கொதித்துக் கொண்டிருக்கிறது. விவசாயம் முடங்கிவிட்டது. வயல் வரப்பு, தோட்டம் துரவு எல்லாம் சும்மா கிடக்கிறது. மருந்து தெளிப்பது, களை கொத்துவது, பாத்தி கட்டுவது... எந்த வேலையும் இல்லை. கூலிக்குப் போகிறவர்கள்கூட சுணங்கி விட்டார்கள். ஒருவிதமான பீதி.

கடைத் தெருவும் களை இழந்துவிட்டது. பாதிக்குப் பாதி மூடித்தான் கிடக்கு. அடைத்துக் கிடக்கும் கடைவாசல் போலீஸுக்குத் தோது. அதில் அவர்கள் உட்கார்ந்து கொள்கிறார்கள். மதிய நேரத்தில் கேரம், தாயம், பாம்புக் கட்டம் என்று இறங்கிவிடுகிறார்கள். எத்தனை நேரம் தெருவையே பார்க்க முடியும்.

ஊரில் எந்தத் தொழிலுமே சுறுசுறுப்பு இல்லை. கும்பல் கும்பலாக நின்று பீதியோடுதான் பேசிக் கொண்டிருக்கிறது. மொத்தம் இருதரப்பிலும் சேர்ந்து இருபத்து எட்டு பேருக்குமேல் போலீஸ் பிடித்துக் கொண்டு போய்விட்டது! சின்னமனூர் போலீஸ் ஸ்டேஷன் வாசலிலும் பாளையம் வக்கீல்கள் வீட்டு வாசலிலும் ஆட்கள் காத்துக் கிடந்தார்கள். ஜாமீனுக்கு ஆள் தேடிக் கொண்டும், ஆட்களோடும் காத்திருந்தார்கள்!

சின்னக் கருப்பன் வீட்டில் ஒரு கூட்டம் கூடியது. எதிர்க்கூட்டம். சின்னக் கருப்பன்தான் அந்த ஜாதி நாட்டாமை. செல்வாக்கான ஆள். தோட்டம், காடு கரை என்று நிலபுலன்கள் உண்டு. அவருடைய பிள்ளைகள் எல்லாம் 'உசந்த' நிலையில் இருக்கிறார்கள். குடியானவர்கள்கூட நின்று பேசுவார்கள். 'போப்பா' 'வாப்பா'வெல்லாம் கிடையாது. 'வாங்க போங்க' என்றுதான் பேசுவார்கள். இதேபோல்தான் முத்துக்காளையும். இவர் பாளையத்தில் ஒரு வக்கீலிடம் குமாஸ்தா. ஏழு எட்டுத் தலைகளுடன் சின்னக் கருப்பன் வீடே நிறைந்துவிட்டது. அந்தப் பகுதியில் சின்னக் கருப்பன் வீடுதான் பெரிசு. 'கார'வீடு, 'மெச்சு' வீடு என்று புகழ்பெற்றது.

"என்னாப்பா சொல்றீக?"

"நம்ம பயல்களை வெளியிலெ கொண்டார்றது ஒங்க பொறுப்பு. அதுக்கு உண்டானதைப் பண்ணுங்க..."

"என்னா பண்ணட்டும்?"

"முத்துக்காளை சொல்லுப்பா."

"பத்து பன்னிரண்டு பயக மாட்டிக்கிட்டாங்க. அவனுகளெ வெளியே கொண்டாரணும்."

"மருதயிலெ கல்லன் மவன் இருக்காப்புலெ. அவனுக்கு டி.எஸ்.பி.யைத் தெரியுமாம். நம்ம சம்சாரத்தோட அண்ணன் அரசாங்க வக்கீலா பெரியகுளத்துலெ இருக்காப்புலெ..."

"சரி..."

"சரி... சரிண்டா... துட்டுக்கு என்னடா செய்யப் போறேண்டா?"

"வெளியூர்கள்லெ இருக்காங்கள்லெ நம்ம பயக; அவிங்க தாரேங்கிறாங்க."

"அப்புறம் அவிங்க சொல்றதுக்கு எல்லாம் நாம தலையாட்டிக்கிட்டு இருக்கணும்!"

"செய்வோம்."

"வேற வெனையே

வேண்டாம்டா. அவிங்க சொல்றாங்க... இவிங்க சொல்றாங்கனு நம்ம பொழப்பு போயிடுமுடா...'' என்றார் சின்னக் கருப்பன்.

''என்னா சொல்றீக. இன்னும் அடங்கி யேவா கெடக்கச் சொல்லுறீக...?''

''எம்லா குதிக்காதம்லா. அவரு என்ன சொல்றாருண்டு கேட்டுக்கிடுவோம்...''

''அப்பு! அவரு பேச்சே சரியில்லை. அவுக பக்கம்தேன் அவரு.''

''ஆமடா. நான் அவுக பக்கம்தேன். பேசுறாம் பாரு பேச்சு. உன்னைப் போல பல பேரப் பார்த்தவன்டா. எதுனா தொரட் டுப் பண்ணிப்பிட்டு அப்புறம் சிக்கல்லெ மாட்டுறது யாரு?...'' என்று எழுந்து நின் றார் சின்னக் கருப்பன்.

''என்னா சிக்கலு? அவிங்க கம்பு சுத்த றாங்க. கத்தி நீட்டுறாங்கன்னு சொல்லுச்சு. என்னா செஞ்சீங்க...?''

''இப்ப நாமதாண்டா முந்திரிக் கொட்டை கெணக்கா போயி...''

''வாய மூடுப்பே. எவனோ பண்ணிட் டுப் போயிட்டான். நம்ம தலையிலெ விழுந்துச்சு...''



''சொன்னாப்புலெ! எவன் நம்புவான்?''

''நாளைக்கு மீனாட்சிபுரத்துலெ இருந்தும், மருதயிலெ இருந்தும் நம்ம ஆளுங்க வர்றாங்க. மருதக்காரர் எம்புட்டு துட்டு வேணாம் தாரேங்கறார்.''

''அப்ப நா எதுக்கு? உங்க இஷ்டம். எவன் பேச்சவோ கேட்டுக்கிட்டு இங்கிட்டு வந்து குதிச்சா...''

''இப்ப நம்ம பயலுகள வேலை வெட்டினு கூப்பிடக்கூடாதுன்னு முடிவு பண்ணியிருக்காங்க. அதுக்கு என்னா சொல்றது.''

''போகட்டும்! நம்ம ஆளுக ஒத்தாச இல்லாம அவிங்களுக்கு வெள்ளாமை வீடு வருமா? அதையும் பாத்துப்பிடுவோம்'' என்றார் சின்னக் கருப்பன்.

''அவிங்கள அடக்கணும்.''

''அடங்கிடுவாங்க... வுடு.''

''இன்னும் ஏழு எட்டுப் பயல்களைக் குறிவெக்கணும்.''

''இந்தப் பேச்செல்லாம் வேண்டாம்.''

''பயந்தா ஆவாது.''

''ஏலெ மக்கா. சாதி நாட்டாம பேச்சக் கேட்டு நடக்குறதப் பாருங்கடா. சும்மா வீராப்பு வேண்டாம்.''

''இது வீராப்பு இல்லெ!''

''ஏலெ இப்ப உள்ள இருக்கவனுங்களை வெளியே கொண்டாற யோசனை சொல்லுங்கடாண்டா...''

''அவிங்க தலக்கட்டுக்கு இவ்வளவுண்டு வாங்குறாங்களாம்.''

''அப்படியே நாமளும் பண்ணலாம்.''

''நம்ம பயல்களாலெ தரவா முடியும்?''

''அதான் நா சொல்றது. மருதயிலெ நம்ம ஊரு ஆளு ஒருத்தர் இருக்கார். சர்க்கார்லெ பெரிய உத்தியோகம். எம்புட்டுனா ஓரம் தருவார்.''

சின்னக் கருப்பன் யோசித்தார்.

''ஏலெ இது எங்கேயோ போய் கொண்டு விட்டுடும்டா...? அல்லாப் பிச்சை இருந்தா கூட்டிட்டு வாங்கடா.''

''வீட்டுலெ காணலே.''

''எதுக்கு?''

''கோளாறு கேக்கலாம்.''

''சாதி நாட்டாம நீங்க என்ன சொல்றீங்க?''

''செய்றேண்டா. என்னாலெ முடிஞ்ச மட்டும் செய்றேன். ஒரு பெரிய நோட்டைத் தர்றேன்.''

**ம**ணிக்கொடி எழுத்தாளர்களுள் ஒருவர், 'சிட்டி' என்ற பெயரில் அழைக்கப்பட்ட பெ.கோ.சுந்தரராஜன். சிட்டியின் நூற்றாண்டு விழா துவக்கக் கூட்டம் (18.4.2009) சென்னையில் நடந்தேறியது. அண்ணாவின் வகுப்புத் தோழரான சிட்டி எழுதிய 'தமிழ்ச் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும்' என்ற நூல், தமிழ் இலக்கிய உலகில் முழுமையான ஆய்வுப் பெட்டகம். தமிழ் வருடமான 'சாதாரணம்' என்ற வருடத்தில் தூமகேது (வால் நட்சத்திரம்) வானில் தோன்றியபோது சிட்டி பிறந்ததால், 'சாதாரண வருஷத்து தூமகேது' என்ற செல்லப் பெயருமுண்டு. சிட்டியும் தி.ஜா.வும் சேர்ந்து காவேரி ஆறு துவங்கும் இடத்திலிருந்து கடலில் கலக்குமிடம் வரை ஆற்றின் கரையோரமாகவே பயணம் செய்து ஆற்றோர கிராமங்கள், கோயில்கள், மக்களின் வாழ்வு என விவரித்து எழுதியுள்ள 'நடந்தாய் வாழி காவேரி' தொடர் ஒரு இலக்கிய ஆவணம். கதர்ச் சட்டைக்காரரான சிட்டியின் அந்திமந்தாரை என்னும் சிறுகதைத் தொகுப்பு காலக் கல்வெட்டு. சிட்டி போன்ற முன்னோடிகளை நினைவு கூர்தல் என்பது விழுதுகள் வேரை வாழ்த்துவது போல.

- அமிர்தா

**நா**கு ஒருவன் இருப்பதுதான் கோவிந்துக்கு இதமாக இருக்கிறது. அவனும் ஏதேதோ சொல்லிக் கொண்டிருக்கிறான். அவன் ஐயா அவனைத் துரத்துகிறாராம். இந்த ஊரே வேண்டாம் என்கிறாராம். 'எங்காவது போய் வேலை வெட்டினு பாரு. ஒண்ணும் இல்லாட்டா திண்டுக்கல் சித்தப்பா வீட்டுக்காவது போ' என்கிறாராம்.

**ஒ**ரு நாள் மாலை. நாகு 'வாரேன்' என்று போனவன் வரவில்லை. இப்படியே நடக்கலாம் என்று தெருவில் இறங்கினான். கால்கள் அவனை அறியாமலே ஊரடித் தோட்டத்துக்குப் போயிற்று. பாதிதூரம் தான் போயிருப்பான். துரத்திக் கொண்டே பின்னாடியே ஒரு குரல். சீமராசு.

''தனியாகவா...?''

''சித்த நடக்கணும்போல இருக்கு.''

''அட யார்னா கூப்பிட்டுப் போகலாம்.''

''செட்டியார் தோட்டத்துக்குதேன்.''

''நான் துணைக்கு வரவா?''

'என்ன சொல்வது?'

''ம்''என்றான்.

தோட்டத்தில் கால் வைத்ததும் 'வெறி'ச் சென்று இருந்தது! பார்த்துப் பார்த்து பழகிய முகம் 'மொட்டை' போட்டு வந்து நிற்பது மாதிரி இருந்தது! அந்தக் குடிசையை நோக்கிப் போனான்.



''நம்ம இளைஞர் அணித் தலைவர் பேட்டி கொடுக்கும்போது தன் வயசை வெளிப்படுத்திடறார்!''

''எப்படி?''

''பிடிச்ச நடிகை யாருன்னு கேட்டா 'அஞ்சலி தேவி'ன்னு சொல்லிடறார்!''

– அம்பை தேவா

உள்ளே ஒண்ணும் காணோம். அதைப் பார்த்ததும் அப்படியே திக்பிரமை பிடித்தவன்போல் நின்று விட்டான்.

''எல்லாம் காலி பண்ணியாச்சு!''

''எதுக்காம்?''

''அவிங்க ஆளுகளெ வெக்கப் படாதுனு முடிவு. செட்டியார் முடுக்கி விட்டுட்டார்.''

''எங்க சீமராசு?''

''அம்புட்டுத்தேன் தொரத்தி விட்டாச்சுனா!''

''மம்பட்டியானையா?''

''எல்லாம் போயாச்சு. அவன் பொண்டாடியும் பொண்ணும் கோட்டுருக்குப் போயாச்சு! மம்பட்டியான் இங்குட்டுத்தான் திரியறான்.''

''எப்பயாம்?''

''இனி கூலி வேலைக்கோ அறுப்பு, களையெடுப்பு, நடவுனு எதுக்கும் கூப்பிடக் கூடாது. அவிங்க ஒறவே வேணாமுன்னு வுட்டாச்சு.''

''ம்ஹூம்.''

''இன்னும் வம்ம வச்சிருக்காங்

## 'சாதாரண வருஷத்து தாமகேது!'



● சிட்டி

கன்னு நானும் யாவாரத்துக்குப் போயி ஏழு எட்டு நாள் ஆச்சு.''

மோட்டார் தொட்டிக்குப் பக்கம் உட்கார்ந்தான். இந்த இடத்தில் இருந்து குடிசையைப் பார்த்தால் பஞ்சு நிற்பது தெரியும். இந்த ஓரம்தான் நிற்பாள். அவனுக்கு மனசு 'சுருக்'கென்றது! இப்படி மொட்டையாக பார்ப்பது வெறுமையாக இருந்தது. ஏதோ அடுத்த பிறவி எடுத்து வந்து முதல் பிறவியில் விட்டுவிட்டு வந்ததைப் பார்ப்பது போல் இருந்தது. காலம் கனிந்து இப்படியா அழுகிப் போகவேண்டும்.

''அவிங்க சேவாலை வம்ம வெச்சு கிட்டே இருந்திருக்காங்க. இப்படி ரெண்டு மூணு பேரைக் குறி வெச்சிருக்காங்க.''

''எதுக்கு?''

''என்னமோ! அவிங்க ஆள நம்ம பக்கத்து ஆளுக அடிச்சுப் போட்டாங்களாம்.''

''எப்பவாம்?''

''பம்பல் சமயத்துலெ ஒரு நொண்டிக் காலன் ஒருத்தன். எப்பப் பார்த்தாலும் கெட்ட வார்த்தையா பேசுவான். அவனை போட்டு நொறுக்கிப் போட்டாங்க நம்ம பயலுக.''

''ஏன்?''

''அக்குறும்பா பேசியிருக்கான்.''

''அப்புறம்?''

''பொம்பளைங்க விசயம்.''

கோவிந்து சேராக முகம் பார்த்தான்.

''ரோட்டு மேலே ஒரு வீடு இருக்கு தெரியுமா? அங்க ஒரு பொம்பள. அவிங்க ஆளுகதேன். அவளோட நம்ம நெல்லு வியாபாரி மாரியப்பனுக்கு தொடுப்பு. அவங்க அண்ணன்காரன் என்னடானு கேட்டதுக்கு சின்னமனூர் சினிமா கொட்டாயில வெச்சு ஆளாளுக்கு சாத்திப்பிட்டாங்க.. இதெல்லாம் வெச்சுகிட்டேதான்...''

''ம்''

''அவிங்க முத குறி சேவாலு கெடையாதாம். அது வேற ஆளு. அத இப்ப சொல்லுவானேன்? எப்படியோ சேவாலு மாட்டிக்கிட்டாப்புலெ. அந்த செவலதேன் காட்டி வுட்டது.''

''ம்ஹூம்.''

''வேண்டாம் கோவிந்து. இந்த ஊர் வேணாம். இம்புட்டுப் படிச்சுப்போட்டு எதுக்கு? எங்கனா போயி தொழில்லெ எறங்கிடுங்க...

நானும் பார்த்துக்கிட்டுதான் இருக்கேன். ஒண்ணும் தோது இல்லாம இருக்கு. எங்குட்டுனா ஒரு கடையப் போட்டுட்டா எம்பாடு தீந்துடும். ஊர் ஊரா சுத்தும்படியா இருக்கு...''

தூரத்தில் செட்டியார் நடந்து வருவது தெரிந்து கோவிந்துக்கு மனம் பரபரப்பாகி விட்டது!

(காற்று வீசும்)



''தலைவரே... நேத்து என் கனவுல நீங்க வந்தீங்க?''

''அதுக்கென்ன?''

''வாழ்க கோஷம் போட்டதுக்குக் கூலி கொடுங்க!''

- அம்பை தேவா




“சொத்துக் கணக்கை கம்மியா காட்டினதுல இருந்து இந்த கெட்டப்புலதான் இருக்காரு!”

-எஸ்.ஜெ.கலைவாணி

ஓவியம் : பின்னை



புரட்சிகள் நடந்து கொண்டேயிருக்கும் இடம் ஃபேஷன் உலகம். தினம் ஒரு மாற்றம், வேளைக்கொரு அறிமுகம்! ஃபேஷனைப் பற்றி, மாடல்களைப் பற்றி எத்தனை தெரிந்து வைத்திருக்கிறீர்கள் என்பதைச் சோதிக்க ஒரு சுவையான ஃபேஷன் க்விஸ்.

1) மினி ஸ்கர்ட்டைக் கண்டுபிடித்தது யார்?

a) விவியன் வெஸ்ட்வுட், b) மேரி க்வாண்ட்

2) பிரபல சாக்கர் விளையாட்டு வீரரைத் திருமணம் புரிந்த சூப்பர் மாடல் யார்?

a) நவோமி கேம்ப்பெல், b) கேட் மோஸ்.

3) 90களில் பிரபலமாக இருந்த ஒரு டீ.வி. ஷோவின் மூலம் 'ரேச்சல்' ஹேர்கட் ஹிட்டானது. அந்த டீ.வி. ஷோவின் பெயர்?

# ஃபேஷன்

a) சியர்ஸ், b) ஃப்ரெண்ட்ஸ்

4) ஹிப்பி ஆடைகள் மிகப் பிரபலமாக இருந்தது எப்போது?

a) 50 களில், b) 60 களில்

5) பூடில் ஸ்கர்ட் (Poodle Skirt) பாப்புலரானது, எப்போது?

a) 50 களில், b) 60 களில்

6) கேட் வாக் செய்யும்போது கால்களில் பிளாட்ஃபார்ம் டைப் காலணி அணிந்த மிகப் பிரபலமான சூப்பர் மாடல் தடுக்கி விழுந்து விட்டார். அவர் யார்?

a) சோஃபி டால், b) நவோமி

# உடையழகு நடைபழகு

கேம்ப்பெல்

7) மார்ஷல் தீவில் அணு பரிசோதனை செய்யும் இடத்தின் பெயர் ஒரு ஆடையுடன் சம்பந்தப்பட்டது. அது என்ன?

a) பிகினி, b) வெல்க்ரோ

8) 80களில் பிரபலமான 'பவர் ட்ரஸ்ஸிங்கின்' அடையாளம் என்ன?

a) ஷோல்டர் பேட்ஸ், b) ஹெண்ட் பேல்

9) 70களில் ட்ரெண்டியான ஜீன்ஸ் டைப் அணிவது என்றால் என்ன?

a) ஸ்டோன் வாஷ், b) பெல்பாட்டம்.

விடைகள்:

1. மேரி க்வாண்ட்
2. கேட் மோஸ்
3. ஃபிரெண்ட்ஸ்
4. 60 களில்
5. 50 களில்
6. நவோமி கேம்ப்பெல்
7. பிகினி
8. ஷோல்டர் பேட்ஸ்
9. பெல்பாட்டம்

- லதா சேகர்



* நவோமி கேம்ப்பெல்

# க்விஸ்!



- எஸ்.ஜெ. கலைவாணி

**மேஷம் :** தொட்டது துலங்கும் நேரம். வீடு, மனைகளில் முதலீடு செய்வதற்குத் தகுந்த நேரம். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிட்டும். சிலருக்கு வீடு மாற்றம் செய்ய வேண்டி இருக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர சங்கடங்கள் தீரும்.

**ரிஷபம்:** நேர்முகத் தேர்வில் வெற்றி பெறுவீர்கள். திருமணம் கைகூடும். உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். பண வசதி பெருகும், செலவுகள் கட்டுக்குள் இருக்கும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் கிட்டும். சனி வழிபாடு செய்து வர சங்கடங்கள் தீரும்.

# நடக்குமென்பார்;

**மிதுனம்:** எதிர்ப்புகள் விலகும். உடல் ஆரோக்கியம் சீராகும். திருமணத் தடை விலகி கைகூடும். வாக்கு வன்மை மேலோங்கும். பணப் பிரச்னை தீரும். வேலையில் இருந்து வந்த பிரச்னைகள் தீரும். வியாபாரம் சூடு பிடிக்கும். ராகு / கேது வழிபாடு செய்து வர கஷ்டங்கள் விலகி நற்பலன் கிட்டும்.

**கடகம்:** பணப்பிரச்னை தீரும். எதிர்பார்த்த காரியம் நிறைவேறும். கடன் தொல்லையிலிருந்து விடுபடுவீர்கள். நீண்ட காலம் முடிவு பெறாமல் இருந்து வந்த வழக்கு வெற்றி அளிக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நண்பர் / உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**சிம்மம்:** வசந்த காலம் திரும்பி உள்ளது. எதிரிகளை வீழ்த்தும் காலம் வந்தாச்சு. உங்கள் காட்டில் மழைதான் கொட்டப் போகிறது. பூனை மாதிரி பதுங்கி

எலெக்ஷன்
ரிசல்ட்டுக்குப் பின்னாடி
என்ன நடக்கும்னு
கணிக்க முடியுமா
ஸார்?

# நடக்கும்!

## 3.5.09 முதல் 9.5.09 வரை...

**தஞ்சை பரத்வாஜ்**

இருந்த நீங்கள் ஆணையை அடிக்கப் போகி றீர்கள். கல்வி வளம் மேம்படும். சனி வழி பாடு செய்து வர நற்பலன் பெருகும்.

**கன்னி:** பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். கடன் தொல்லை தீரும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். குழந் தைகள் மூலம் சந்தோஷம் கிட்டும். வீட்டில் சுபச் செலவு ஏற்படும். வீடு மாற் றம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர சங்கடம் தீரும்.

**துலாம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். கடன் தொல்லை தீரும். புதிய வீடு, மனை வாங்க உகந்த நேரம். செலவு கள் பயனுள்ளதாக இருக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். எதிர்பார்த்த உதவி தக்க சமயத் தில் வந்து சேரும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

**விருச்சிகம்:** ஏற்றம் மிகுந்த வாரம். புண் ணிய ஸ்தலம் செல்வீர் கள். நவ நாகரிகப் பொருட்கள் வாங்குவீர்கள். கடன் சுமை விலகும். செலவுகள் கட்டுக்குள் இருக் கும். மகான்களின் தரிசனம் கிட்டும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் பெறு வீர்கள். குரு / சனி வழிபாடு நற்பலன் அளிக்கும்.

**தனுசு:** தடை விலகி திருமணம் நடக் கும். குடும்ப வாழ்வில் இருந்துவந்த பிரச் னைகள் முடிவுக்கு வரும். வராத நிலுவை கள் வசூலாகும். வழக்கு வெற்றி பெறும். மன நிம்மதி ஏற்படும். ராகு / கேது வழிபாடு செய்து வர சங்கடங்கள் தீரும்.

**மகரம்:** கஷ்டங்கள் விலகி நிம்மதி பெறுவீர்கள். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். பண வசதி பெருகும். திடீர் பிரயாணம் வந்து சேரும். மனக்குழப்பம் தீரும். வராத நிலுவைகள் வசூலாகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். உடல் ஆரோக்கியமாக இருக்கும். வழக்கு வெற் றிப் பாதையில் செல்லும். ராகு / கேது/ சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**கும்பம்:** வீட்டைப் பற்றியோ, குடும் பத்தைப் பற்றியோ இருந்து வந்த மனக் கவலை தீரும். திருமணக் காரியம் நிறை வேறும். பணவசதி பெருகும். வியாபாரத் தில் நல்ல முன்னேற்றம் இருக்கும். வேலையில் உயர்வு உண்டாகும். கல்வி வளம் மேன்மை பெறும். சனி / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**மீனம்:** இடமாற்றம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டாளி கள் விலகிப் போவார்கள். குழந்தைகள் மூலம் சுபகாரியம் நடக்கும். வெளிநாட்டு மனிதர்கள் மூலம் ஆதாயம் ஏற்படும். வேலையில் உயர்வு ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். வீடு / மனை வாங்க ஏற்ற நேரம். ராகு / கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



'ரௌத்திரம் பழகு' என்று பாரதியார் சொல்லியிருப்பதை எடுத்துக்காட்டினார், இவ்வாண்டு கல்கி சதாசிவம் நினைவு சொற்பொழிவு நிகழ்த்திய சேஷசாயி. ''கல்கி சதாசிவம் அவர்களுடைய கோபம் பிரசித்தமானது. ஆனால், 'கெட்ட கோபம் வரும்' என்று சதாதாரணமாகச் சொல்

## கல்கி ராஜேந்திரன்

கிறோமே அப்படிப்பட்ட கோபம் இல்லை. சதாசிவத்தின் கோபம் நல்ல கோபம்; வரவேண்டிய காரியத்துக்கு வரவேண்டிய நேரத்தில் தப்பாமல் வருகின்ற கோபம்!'' என்றார்.

''அட! சதாசிவத்தை இவ்வளவு அழகாக, கச்சிதமாக அளந்து வைத்திருக்கிறாரே'' என்றுதான் நினைத்துக்கொண்டேன். சதாசிவம், பணத்தை விடவும் குணம்தான் முக்கியம் என்பதை உணர்த்த, கத்தை ரூபாய் நோட்டுக்களை ஒருமுறை எரிகிற அடுப்பிலே எறிந்திருக்கிறார்! பிறரைத் திருத்துவதற்காக, பலமுறை நாட்கணக்கில் உபவாசம் இருந்திருக்கிறார்! ஓங்கிக் குரலெடுத்துக் கோபித்துக் கொண்டும் இருக்கிறார்!

'கல்கி' - சதாசிவம் - ராஜாஜி மூவருக்கும் கோபம் வரும். ஆனால் மின்னல் வேகத்தில் தோன்றி மறைந்தும் விடும். உள்ளத்தில் வன்மம் குடிகொள்ளாது. காலையில் கோபப்பட்டவரிடம் பிற்பகலில் சகஜமாகப் பழகுவார்கள்.

'கல்கி' - சதாசிவம் இருவருமே கல்கி ஆசிரியர்களாக இருந்த வெவ்வேறு காலகட்டங்களில், தவறுகளைக் கண்டிக்கப்போக தவறிழைத்த உதவி ஆசிரியர்கள் கோபித்துக் கொண்டு ராஜினாமா செய்துவிட்டுப் போயிருக்கிறார்கள். சில காலம் சென்று அவர்களில் சிலர் திரும்பி வந்து தாங்கள் சிரமப்படுவதாகச் சொல்லியும் இருக்கிறார்கள். அவர்களைத் தயங்காமல் மறுபடியும் வேலைக்கு ஏற்றுக்கொள்கிற மனப்பக்குவம்




'கல்கி' - சதாசிவம், ஆகிய இருவருக்குமே இருந்தது. இதற்கு விதிவிலக்காவ ஒரு சம்பவமும் நடந்ததுண்டு!




* அமரர் கல்கி, மூதறிஞர் ராஜாஜி.

ஓர் உதவி ஆசிரியரைப் பயணக் கட்டுரை எழுதுவதற்காக நிறைய செலவுக்குப் பணம் தந்து அனுப்பி வைத்தார், கல்கி ஆசிரியர் சதாசிவம். அவர் திரும்பி வந்து பயணக் கட்டுரைத் தொடரே எழுதினார். ரொம்ப சுவாரஸ்யமாக இருந்தது. பாராட்டுகள் குவிந்தன. ஆனால் இந்த சுவாரஸ்யத்தின் பின்னணி

வெகு சீக்கிரம் அம்பலமாகிவிட்டது!

ஏற்கெனவே கல்கி காரியாலயத்தில் பணியாற்றி, கோபித்துக் கொண்டு வெளியேறியிருந்த இன்னொரு எழுத்தாளர், பல ஆண்டுகளுக்கு முன் கல்கி எழுதியிருந்த



கல்கி சதாசிவம்

# தார்மிகக் கோபங்கள்!

பயணத் தொடரையும் இப்போதைய பயணத் தொடரையும் ஒப்பு நோக்கி, பல பகுதிகள் வரிக்கு வரி காப்பி அடிக்கப்பட்டிருப்பதாகக் குற்றம் சாட்டி ராஜாஜிக்கு கடிதம் எழுதி விட்டார்!

கடிதத்தை ராஜாஜி சதாசிவத்திடம் தந்து, 'இது எவ்வளவு தூரம் உண்மையோ, பாருங்கள்' என்று கூறினார். தமது உதவி ஆசிரியர் ஒருவரைப் பற்றி ராஜாஜிக்கு இப்படி ஒரு கடிதம் போனதே சதாசிவத்துக்கு வெட்கத்தையும் அதனால் கோபத்தையும் ஒருங்கே உண்டு பண்ணிவிட்டது. என்றாலும் ஆய்வு செய்யுமாறு ராஜாஜி சொல்லியிருந்ததால் கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு, என்னை அழைத்து, ''அப்பா எழுதிய புத்தகங்களையெல்லாம் வைத்திருப்பாயே; இதைக் கொஞ்சம் ஆராய்ச்சி பண்ணு'' என்று கூறி கடிதத்தைக் கொடுத்தார்.

அதைப் படித்த எனக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது. என் பக்கத்திலேயே அமர்ந்து என்னைப் போலவே உதவி ஆசிரியராகப் பணியாற்றும் ஒருவரைக் குறித்து உளவு பார்ப்பதா என்ற தயக்கம் ஒரு பக்கம்; உதவி ஆசிரியர் என்ற முறையில் ஆசிரியரின் கட்டளையை நிறைவேற்ற வேண்டிய நிலைமை இன்னொரு



பக்கம். மனதைத் தேற்றிக் கொண்டு காரியத்தில் இறங்கினேன்.

தோண்டத் தோண்டப் புதையல் என்பார்களே, அப்படி ஒப்பு நோக்க, நோக்க 'கல்கி' அவர்களின் தொடர் கட்டுரைகளே சிற்சில மாற்றங்களுடன் மறு பிரசுரமாகிக் கொண்டிருப்பது புரிந்தது.

ரொம்ப வருத்தத்தோடு சதாசிவத்தினிடம் போய், ''கசப்பான உண்மைதான்; இருந்தாலும் அவரைக் கடுமையாக எச்சரித்து இந்த முறை மன்னித்து விடுங்கள். மறுமுறை தப்பு செய்ய மாட்டார்'' என்றேன். சதாசிவம், ''நாளைக்குச் சொல்கிறேன்'' என்றார்.

மறுநாள் ஒரு பேட்டியை முடித்துக் கொண்டு பிற்பகல் காரியாலயம் சென்றேன். பக்கத்து ஸீட் காலியாக இருந்தது. விசாரித்ததில் அன்று காலை அவருக்குக் கணக்குத் தீர்த்து அனுப்பிவிட்டதாகத் தெரியவந்தது. நேரே சதாசிவத்தினிடம் போய், ''இப்படி பண்ணி விட்டீர்களே, 'நாளைக்குச் சொல்கிறேன்' என்றதால் நம்பிக்கையோடு இருந்தேனே'' என்றேன்.

''இதப்பாரு, தப்பு செய்தவனை மன்னிக்கலாம்; ஆனா தப்பை நியாயப்படுத்தப் பார்க்கிறவனுக்கு மன்னிப்பே கிடையாது'' என்றார்.

''நியாயப்படுத்தறதா?'' நான் புரியாமல் கேட்டேன்.

''அவன் என்ன சொல்றான், தெரியுமோ? 'கல்கி'யிடம் அவனுக்கு அசாத்திய பக்தியாம். ஆழ்ந்த ஈடுபாட்டுடன் அவர் எழுத்தையெல்லாம் திரும்பத் திரும்பப் படிச்சதனால அவர் மாதிரியே எழுதிட்டானாம்! எப்படி இருக்கு கதை!''

நான் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு திரும்பினேன். சதாசிவத்தின் நார்மிகக் கோபத்துக்கு ஆளான அந்த உதவி ஆசிரியர் பல முறை முயன்றும் மறுபடி கல்கி காரியாலயத்தினுள் அடியெடுத்து வைக்க முடியவில்லை.

பல ஆண்டுகளுக்குப் பின் சதாசிவம் ஆசிரியர் பொறுப்பெல்லாம் துறந்த பிறகு, ஒரு சமயம் நான் அவர் வீட்டுக்குப் போயிருந்தபோது, அங்கே எனக்கு முன்னால் அந்த எழுத்தாளர் - முன்னாள் கல்கி உதவி ஆசிரியர் - தமது நண்பர் ஒருவருடன் வந்து அமர்ந்திருப்பதைக் கண்டேன். அவ்விருவருக்கும் சதாசிவம் - எம்.எஸ்.தம்பதி, டிபன், சுக்குக் காப்பி எல்லாம் தந்து உபசரித்து கலகலப்பாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் விடைபெற்றுப் போனபிறகு, ''என்ன இது? பழசையெல்லாம் மறந்துட்டேளா?'' என்று கேட்டேன்.

''மறக்கலை; ஆனா இப்ப நான் கல்கி ஆசிரியர் பதவியில் இல்லையோன்னோ, அதனால மன்னிச்சுட்டேன்'' என்றார்

**"தப்பு செய்தவனை மன்னிக்கலாம்; ஆனா தப்பை நியாயப்படுத்தப் பார்க்கிறவனுக்கு மன்னிப்பே கிடையாது!" என்றார் சதாசிவம்.**

சதாசிவம்.

**ரா**ஜாஜி அவர்களின் கோபத்துக்கு நானே ஒரு சமயம் ஆளானது உண்டு. அவர் கோபம் சதாசிவத்தின் கோபம் போலல்லாது ரத்தினச் சுருக்கமாக முடிந்து போகும்; ஆனால் 'சுருக்'கென்று உள்ளத்தைத் தைப்பதாக இருக்கும்!

சுதந்திரக் கட்சி ஆரம்பித்து சில காலம் சென்றதும் தேர்தல் பிரசாரத்துக்காக அவர் சுற்றுப் பயணங்கள் மேற்கொள்ள நேர்ந்தது. சதாசிவம் தமது டாட்ஜ் காரையும் டிரைவர் தனபாலையும் இந்தப் பயணங்களுக்குக் கொடுத்து உதவினார். துணை ஆசிரியர் எஸ்.வி.எஸ். முன் ஸீட்டில் அமர்வார். ராஜாஜியின் பாதுகாப்புக்காக இன்னொரு ஃபியட் காரில் இரண்டு - மூன்று பேரை ஏற்றி டாட்ஜ் காரைப் பின் தொடர்ந்து போகச் சொல்வார் சதாசிவம். தேர்தல் டியூட்டி எனக்கும் அவ்வப்போது ஒதுக்கப்படும்.

சிறிதும் பெரிதுமான பல ஊர்களில் நின்று, தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் பங்கேற்றுப் பேசிவிட்டு மீண்டும் பயணத்தைத் தொடர்வார், ராஜாஜி. ஒரு நாள் பிற்பகல் சுமார் நாலு மணிக்கு எனக்கு காப்பி ஞாபகம் வந்துவிட்டது. கூடவே இலேசான தலைவலியும் ஆரம்பமாகிவிட்டது. வழியில் சற்று பெரிய ஊரில் காரை நிறுத்தச் சொல்லி ஹோட்டலுக்குப் போய் நல்ல டிகிரி காப்பியாக ஆர்டர் செய்து அருந்திவிட்டு மறுபடி கிளம்பினோம். நாங்கள் வந்து சேர்ந்துகொள்ள வசதியாக டிரைவர் தனபால் அட்ஜஸ்ட் பண்ணி டாட்ஜ் காரை ஓட்டுவார்; எட்டிப் பிடித்துவிடலாம் என்ற தைரியம்!

**சி**ல மைல்கள் கடந்ததும் - அடுத்த ஊர் ஆரம்ப எல்லையில் - டாட்ஜ் கார் நிறுத்தப்பட்டிருந்தது. ராஜாஜி காரைவிட்டு இறங்கி சாலை ஓரம் நின்றுகொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் நின்று எஸ்.வி.எஸ். எங்களுக்கு ஏதோ உணர்த்த முயன்று ஜாடை காட்டினார்.

எங்களைக் காணோமே என்றுதான் ராஜாஜி கவலைப்பட்டுக் கொண்டு நிற்கிறார் என்பது எனக்குப் புரிந்துவிட்டது. நான் அவரை அணுகியதும், ஒரே ஒரு கேள்விதான் கேட்டார். அந்த ஒரு கேள்வியில் அவர் கோபம் முழுவதும் உள்ளடங்கி என்னை உலுக்கி எடுத்துவிட்டது.

''என்னைக் கவனிச்சுக்க நீங்கள்லாம் வரேளா அல்லது உங்களைக் கவனிச்சுக்க நான் வரேனா? தெளிவுபடுத்திட்டா தேவலாம்'' என்றார்.

நான் உடல் குறுகிப் போனேன். இலேசான கை நடுக்கத்துடன் ஃபிளாஸ்கைத் திறந்து மூடியில் சூடான காப்பி ஊற்றி நீட்டினேன். வழக்கம்போல அங்கவஸ்திரத்தில் 'கப்'பை வைத்து மெல்ல 'ஸிப்' செய்தார் ராஜாஜி. நிதானமாகச் சாப்பிட்டு முடித்ததும், ''நல்ல காப்பிதான். ஆனால், உங்களைப் பற்றிக் கவலைப்பட்டுத் தவிக்கும் அளவுக்கு நல்ல காப்பி இல்லை'' என்று கூறியபடி காரில் மறுபடி ஏறி அமர்ந்தார்! நல்ல மாட்டுக்கு இந்த ஒரு சூடு போதாதோ!

* சதாசிவம்

***(நினைவலைகள் தொடரும்)***



''அதெல்லாம் முடியாது தலைவரே... கடைசி வரைக்கும் நான்தான் வேட்பாளர்னு எழுதிக் கையெழுத்து போட்டுக் குடுங்க...''

- எஸ்.ஜெ. கலைவாணி

''தலைவர் ரொம்ப நொந்து போயிருக்கார்னு தோணுது.''

''எப்படி...?''

''மணமக்களை வாழ்த்திப் பேசும் போது நம்ம கட்சி மாதிரி இல்லாம ஒற்றுமையா இருக்கணும்னு வாழ்த்தினாரே!''

- சீர்காழி வி. ரேவதி





''எங்களுக்கு வாக்களியுங்கள், சுவிஸ் வங்கியிலிருந்து கோடிக் கணக்கான பணத்தைக் கொண்டு வருவோம்!''

''அது சரி, இப்ப ரொம்ப அவசரம் ஒரு 500 ரூபாய் தர முடியுமா?''

- தென்றல் சண்முகசுந்தரம்.

''தலைவரே நம்ம தேர்தல் அறிக்கையை டி.வி.யில படிச்சுக் காட்றாங்க...''

''அப்படியா சந்தோஷம்!''

''அவசரப்படாதீங்களே! காமெடி சானல்ல இல்லே படிக்கறாங்க!''

- குருவை சோலோ கே.செல்வா



# கடைசிவரைக்கும் நான்தான்!



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 20 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.




குக்குட முனிவரின் குடிலை அடைந்த அந்தப் பெண்கள் தண்ணீர் தெளித்து ஆசிரமத்தைச் சுத்தம் செய்து, கோலமிட்டு, தோரணம் கட்டி, பூச்சரம் தொடுத்து முடித்தனர். இத்தனை பணிகளையும் செய்து முடித்துவிட்டு அவர்கள் வந்த வழியே திரும்பத் தொடங்க, புண்டலீகன் பெரும் அதிர்ச்சிக்குள்ளானான். வரும்போது வனப்பின்றிக் காணப்பட்ட அந்தப் பெண்களின் தேகங்கள் இப்போது எப்படி இவ்வளவு அழகாக மாறின? அழுக்குகள் நிரம்பி வழிந்த அவர்களின் உடைகள் வெண்மைக்கு இலக்கணமாக மாறிவிட்டது எப்படி? வரும்போது தளர்வாக இருந்த அவர்களின் நடை இப்போது உற்சாகமும் வேகமும் கூடியதாக மாறி விட்ட மாயமென்ன?

புதிர்களைக் களைய உடனடியாக அந்தப் பெண்களை நோக்கி விரைவாக நடைபோட்டான் புண்டலீகன். தன் ஆச்சரியத்தை அவர்களிடம் வெளிப்படுத்தி விளக்கம் கேட்டான்.

அந்தப் பெண்களில் நடுநாயகமாக நின்றிருந்தவள் பதில் கூறத் தொடங்கினாள். ''நாங்கள் பெண் உருவத்தில் வந்திருக்கும் நதிகள். நான் கங்கை; இவள் யமுனை. அவள்...'' இப்படித் தொடங்கி அனைவரையும் அறிமுகம் செய்தபிறகு, ''இந்த உருவத்தில் நாங்கள் எந்த மனிதர்களின் கண்ணுக்கும் தென்படமாட்டோம். அதையும் மீறி உனக்குப் புலப்பட்டிருக்கிறோம் என்றால், இறைவன் ஏதோ ஒரு சிறப்பை இந்தப் பூமிக்கு அளிக்க திருவுள்ளம் கொண்டிருக்கிறான். எனவே உண்மைகளை உன்னிடம் தயங்காமல் பகிர்ந்துகொள்கிறோம். பெரும் பாவங்களைச் செய்த மனிதர்கள் தங்கள் பாவங்களைப் போக்கிக்கொள்ள எங்களைப் போன்ற புண்ணிய நதிகளில் நீராடுகிறார்கள். அவர்களின் பாவங்கள் நீங்கினாலும் அந்தப் பாவங்களை நாங்கள் சுமக்கவேண்டி இருக்கிறது. அதைப் போக்கிக் கொள்ளத்தான் இந்த முனிவரின் ஆசிரமத்துக்கு தினமும் அதிகாலையில் வந்து சேவை செய்கிறோம்'' என்றாள்!

# காத்திருக்கும் கடவுள்!

இப்போது புண்டலீகனுக்கு அந்தப் பெண்களின் மாற்றத்துக்கான காரணம் புரிந்தது. ஆனாலும் இன்னமும் ஒரு கேள்வி அவன் மனத்தில் வட்டமடித்துக்கொண்டே இருந்தது.

''எவ்வளவோ முனிவர்கள் இருக்க இந்தக் குக்குட முனிவரின் ஆசிரமத்தை நீங்கள் தேர்ந்தெடுத்தது ஏன்?''

கங்கையிடமிருந்து வந்த பதில் புண்டலீகனைப் புரட்டிப்போட்டது. அவன் வாழ்க்கைப் பாதையை மாற்றியமைத்தது.

''பெற்றோரிடம் பக்தி காட்டுவதிலும் அவர்களுக்கு உரிய சேவைகளைச் செய்வதிலும் தலை சிறந்தவர் குக்குட முனிவர். யாகம், தவம், புனித யாத்திரை ஆகியவற்றைவிட அதிகமான பலனை, இவரது தாய் தந்தை சேவையே இவருக்கு அளித்

திருக்கிறது. இவரது அந்தச் சிறப்பின் காரணமாகத்தான் இங்கு வந்து செல்லும்போது எங்களுக்குப் புத்துணர்வு கிடைக்கிறது'' என்று சொல்லி தம் பயணத்தைத் தொடர்ந்தனர்.

பெற்றோரிடம் பக்தி காட்டுவது இவ்வளவு சிறப்புக்குரிய ஒன்றா? நினைக்க நினைக்க, தான் புரிந்த கேவலச் செயல்கள் புண்டலீகனை வாட்டி வதைத்தன. ஓடிச் சென்று தன் பெற்றோரின் பாதங்களில் விழுந்தான். அந்த நொடியிலிருந்து தம் பாவங்களுக்குப் பரிகாரம் தேட முழுமூச்சாய் இறங்கினான். பெற்றோரைத் தன் குதிரையில் ஏற்றிக்கொண்டு திண்டீரவனத்துக்கும் சந்திரபாகா நதிக்கும் நடுவே ஒரு குடிலை அமைத்து அங்கு அவர்களுடன் தங்கினான்.

பெற்றோரை தெய்வங்களாக அவன் மதிக்கத் தொடங்க, அந்த எண்ண ஓட்டம் தெய்வத்தையே ஒருநாள் காத்திருக்க வைத்துவிட்டது!

# அருண் சரண்யா

மனிதர்களுக்கு சில உளவியல் உண்மைகளை உணர்த்துவதற்காக இறைவன் சில நாடகங்களை நடத்துவது உண்டு.

சத்யபாமாவின் அன்பில் கட்டுண்டு கண்ணன் இருப்பதைப் பார்த்த ருக்மிணிக்கு ஒருநாள் கடும் கோபம் வந்துவிட்டது.

கண்ணனைப் பிரிந்தாள். பண்டரிபுரத்துக்கு அருகில் உள்ள திண்டீரவனம் என்ற பகுதியில் அமர்ந்து மனத்தை அமைதிப்படுத்தத் தவம் செய்யத் தொடங்கினாள்.

காலம் நகர்ந்தது. ருக்மிணியின்



**அபங்க அமுதம்-4**

மார்க தாவுனீ கேலே ஆதீ
தயாநிதீ ஸந்த புடே
தேணேசி பந்தே சாலோ ஜாதா
ந படே குந்தா கோடே காஹீ
- பக்த நிளோபா மஹாராஜ்

''கருணை நிறைந்த ஸந்த்கள் தாங்கள் முதலில் சென்று காண்பித்துக் கொடுத்த நாம சங்கீர்த்தனம் என்ற பாதையில் நாமும் சென்றால், தவறான எதிலுமே சிக்கிக்கொள்ள மாட்டோம்''

பிரிவை அதற்கு மேலும் தாங்க இயலாத கண்ணன், திண்டீரவனத்தை அடைந்தான். கொஞ்சம் ஊடல், சில விளக்கங்கள், அவ்வளவே. பிரிந்தவர் இணைந்தனர். ருக்மிணியுடன் மீண்டும் துவாரகை செல்லக் கிளம்பிய கண்ணன், வழியில் புண்டலீகனைச் சந்திக்க முடிவெடுத்தார்.

★ புண்டலீகன் சமாதி

**கண்ணன், செங்கல்லின் மீது நின்றுகொண்டே தன் பக்தனுக்காகக் காத்திருக்கத் தொடங்கினான்!**

புண்டலீகன் குடிலில் பெற்றோருக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்க, கண்ணபெருமான் மெல்ல நடந்து அவன் பின்புறம் சென்றார். இடுப்பில் இரு கைகளையும் வைத்தபடி அவன் செய்யும் பணிகளைப் பார்க்கத் தொடங்கினார்.

கண்ணுக்கெதிரே வராவிட்டால் என்ன? இல்லத்தில் வீசிய தெய்வீக ஒளியும், ஈடு இணையற்ற வாசமும் தன்னை நாடி வந்திருப்பது இறைவனே என்பதைப் புண்டலீகனுக்கு உணர்த்தின. முன்தினம் மழை பெய்தபடியால் அந்தப் பகுதி சேறாக இருந்தது. தன் அருகிலிருந்த செங்கல்லை எடுத்து இறைவன் இருந்த திசைக்கருகே வீசினான். 'இதன் மீது கொஞ்ச நேரம் நில்லுங்கள். நான் என் தாய் தந்தையருக்குச் சேவை செய்துவிட்டு வருகிறேன்' என்றான்.

அதன்படி செங்கல் மீது கண்ணன் ஏறி நிற்க, இந்திரன் பெரு மகிழ்ச்சி அடைந்தான்.

இந்திரன் இங்கு எங்கு வந்தான் என்கிறீர்களா? அந்தச் செங்கல்லே அவன் தானே!

விருத்திராசுரன் என்ற அரக்கனை இந்திரன் வதம் செய்தான். பெரும் தவம் புரிந்திருந்த அந்த அசுரன், தான் இறக்கும்போது 'நான் எதிர்பாராத சமயத்தில் என்னை வஜ்ராயுதத்தால் தாக்கினாய். எனவே நீ.....' இந்த இடத்தில் அவன் கண்கள் சுற்றுமுற்றும் பார்த்தன. அவன் கண்கள் ஒரு செங்கல்மீது பட, சாபம் தொடர்ந்தது. 'நீ செங்கல்லாகக் கிடப்பாய்'.

இந்திரன் திருமாலை வேண்ட, 'நீ புண்டலீகனின் ஆசிரமத்தில் செங்கல்லாய்க் கிட. உன்மீது நான் ஏறி நின்றதும் நீ சாபவிமோசனம் பெறுவாய்' என்றார்.

அவ்வாறே புண்டலீகன் வீசிய செங்கல்லின் மீது திருமால் ஏறி நிற்க, இந்திரன் சாபவிமோசனம் பெற்றான். அவன் ஆத்மா செங்கல்லிலிருந்து பிரிந்து அழகு உருவம் கொண்டு தேவலோகம் செல்ல, இங்கே கண்ணன் செங்கல்லின்மீது நின்றுகொண்டே தன் பக்தனுக்காகக் காத்திருக்கத் தொடங்கினான்.

படங்கள் : **ஸ்ரீஹரி**
சித்திரங்கள் : **வேதா**



சிதம்பரத்தை எதிர்த்துப் போட்டியிடும் ராஜ. கண்ணப்பன் நிற்கும் சிவகங்கை தொகுதியில் முக்குலத்தோர் கையில்தான் முடிவு இருக்கிறது. 1996ல் கண்ணப்பன் அமைச்சராக இருந்தபோது, அவரது மாமனார் ஊரான அரளிக் கோட்டை என்ற இடத்தில் நாடகம் ஒன்று நடந்தது. அதில் தேவரைப் பற்றி பாடல் வந்து கொண்டிருக்கும் போது கண்ணப்பனின் மைத்துனர் ''பாட்டை நிறுத்து'' என்று சொல்லிவிட்டார். இதனால் தொடர்ந்த வன்முறையில் ஆயிரம் முக்குலத்தோர் கைதானார்கள். இந்தச்சம்பவத்தை விசிறி விடுவது போல முக்குலத்தோரில் இருக்கும் 27 நாட்டு அம்பலங்களை (சமுதாய பிரமுகர்கள்) சிதம்பரம் தரப்பு வளைத்துப் போட்டு வருகிறது. ''இப்போதைக்கு கண்ணப்பன் தன் யாதவ பாசத்தை அடக்கிக் கொள்ள வேண்டும்'' என்கிறார் மாவட்ட அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்!




## கரூரைக் கலக்கும் நரிக்குறவர்கள்!

மிகச் சாதாரண நிலையிலிருந்து வாழ்க்கையில் உயர்ந்தவர் கரூர் தொகுதி தி.மு.க. வேட்பாளரான கே.சி. பழனிச்சாமி. இந்தியாவிலேயே அதிக வருமான வரி கட்டியதற்காக இருமுறை மத்திய அரசின் விருதைப் பெற்றார். பிரசாரத்தில், கரூர் தி.மு.க.வின் உட்கட்சிப் பூசல், இவரை அவ்வப்போது கலக்குகிறது. ஆனாலும் கடந்த ஐந்து வருடங்களாக தாம் செய்த சாதனைகளை, 32 பக்கத்தில் அச்சிட்டு, தொகுதியெங்கும் ஐந்து லட்சம் காப்பிகளைக் கொடுத்திருக்கிறார். தன் கைப்பணத்திலிருந்து சுமார் ஐந்து கோடி ரூபாய் நலப்பணிகளுக்காகச் செலவிட்டிருக்கும் இவருக்கு ஆதரவாக, 40 பேர் கொண்ட நரிக்குறவர் படையொன்று தொகுதியெங்கும் ரவுசு பண்ணிக் கொண்டிருக்கிறது. நாடோடிகளான அவர்களுக்கு வீடு, பட்டா, ரேஷன் கார்டு என்று கொடுத்ததால், நன்றிக்கடன்.

ஒருவழியாக பா.ஜ.க.வுடன் கூட்டணி சேர்ந்த சரத்குமார், ஸ்ரீபெரும்புதூரை வாங்கி காஞ்சி மாவட்டச் செயலாளர் ராவணன் ராமசாமிக்குக் கொடுத்தார். சீட்டையும் கொடுத்து, 'கட்சிக்கு' நிதியையும் சரத் கேட்டதால், வெகுண்ட ராவணன், கட்சியிலிருந்தே விலகி விட்டார். இந்த நிலையில் தென்காசி தொகுதியில் புதிய தமிழகம் கிருஷ்ணசாமிக்கு ஆதரவு தெரிவித்தார் சரத். ''வேறு கூட்டணியில் இருப்பவருக்கு எப்படி ஆதரவு தெரிவிக்கலாம்?'' என்று பா.ஜ.க. வில் கடுகடுத்தவுடன் அதையும் வாபஸ் வாங்கிவிட்டார். சரத்துக்கு ஏன் இத்தனை தடுமாற்றம்?

- ஸ்ரீநி



# ஊனமக்

**ப**டிக்கிற காலத்திலிருந்தே பதினைந்து ரூபாய்க்கு மேல் செருப்பு போட்டது கிடையாது. நல்ல செருப்பு போட்டு வரும் மாணவர்களைப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விட்டிருக்கிறேன்.

பொறுக்க மாட்டாமல் ஒருநாள் தாத்தாவிடம் கேட்டதற்கு, ''கழுதை! கால்ல போடறதுதானடா, அத ஏன் அம்புட்டு காசு போட்டு வாங்கணும்?'' என்று மறுத்துவிட்டார்.

அன்று முதல் செருப்பு விஷயத்தில் பெரிய எதிர்பார்ப்பு இல்லாமல் போனாலும், மனத்துக்குள்ளாக ஓர் ஓரமாக, என்றைக்காவது ஒருநாள் விலையுயர்ந்த செருப்பு அணிய வேண்டும் என்ற எண்ணம் மட்டும் விலகாமல் இருந்து வந்தது.

பின்னர், படித்து முடித்து சென்னை வந்து கைநிறைய சம்பளத்தில் வேலை பார்த்த சமயத்திலும் கூட, எழுபது ரூபாய்க்கு மேல் செருப்பை வாங்கி அணிந்ததில்லை. அலுவலகத்துக்கு ரப்பர் செருப்பு அணிந்து வருபவன் நான் ஒருவனாக மட்டுமே இருந்தேன். அது பற்றி யாரும், எந்தக் கேலியும் பேசியதில்லை. ஏன், சின்னதாய் ஒரு கேள்வி கூட கேட்டதில்லை. ஆனாலும், உள்மனசுதான் ரொம்பக் கேலி பேசியது. பின்னர் ஒருவிதமாக முடிவு எடுத்து, ஒரு ஷோரூமில் 499 ரூபாய் விலைகொடுத்து லெதர் செருப்பை வாங்கி, அதற்குள் காலை நுழைத்தபோது மனசு வலித்தது. ஏதோ கொலைக் குற்றம் செய்தவனின் மனசு போல ஒருவித நடுக்கம். வீட்டுக்குத் தெரிந்தால் கதை கந்தலாகிப் போகும். வீட்டிலிருந்து யாராவது வந்தால் ஒளியவைத்து சமாளித்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்தேன். பிறகுதான் மனசு இலேசானது.

**பு**துச்செருப்பை அணிந்துகொண்டு

கடையை விட்டு வெளியே வந்தேன். வானத்தில் மிதப்பது போலிருந்தது.

புதுப்பெண்டாட்டி கட்டினவன் போல, போய்க் கொண்டிருந்தேன். எதிர்ப்படும் பெண்கள் எல்லாம் வயசு வித்தியாசம் இல்லாமல் என்னையே பார்ப்பது போலிருந்தது. சட்டென்று குறுக்கிட்ட சாலைப் பிரிவில் உள்ள அம்மன் கோயிலில் ஏகப்பட்ட கூட்டம். ஊருக்குப் போகும் சமயங்களில் எல்லாம் அம்மா அடிக்கடி, ''நேரம் கிடைக்கும்போதெல்லாம் கோயிலுக்குப் போய், 'நல்லது நடக்கணும்'னு வேண்டிக்கடா'' என்று கூறிய சொற்கள் நினைவுக்கு வந்தன.

ஓர் ஓரமாக செருப்பைக் கழற்றிப் பாதுகாப்பாக வைத்துவிட்டு, உள்ளே சென்றேன். சாமியிடம் என்ன வேண்டுவது என

# கனவு!

யோசித்து, 'சரி நமக்காக வேண்டிக்கொள்ள ஒன்றும் இல்லை. ஈழ மக்கள் நிம்மதியாக வாழ வேண்டும்' என்று வேண்டிக் கொண்டேன். ஒருவேளை அம்மனால் கைகூடினால் மகிழ்ச்சிதானே என்று நினைத்தவாறு வெளியே வந்தேன்.

நீங்கள் யூகித்தது போலவே என் செருப்பை யாரோ களவாடியிருந்தார்கள். 'பகீர்'னு மனசு வீறல் விட்ட மாதிரி ஆயிடுச்சு. இருபத்தேழு வருடக் கனவு ஒரே நிமிடத்தில் காணாமல் போனது.

பூ விற்கிற பெண்மணி என்னிடம் விசாரித்து விட்டு, ''என்னப்பா புதுச் செருப்பை இங்க விட்டுட்டுப் போகலாமா? இங்க சாமி நகையே காணாம போகுது'' என்று ஒரு குண்டைத் தூக்கி என் நெஞ்சிலே போட்டாள். சுற்றுமுற்றும் பார்த்தேன். என்னைத் தவிர எல்லோரும் பக்திப் பரவசத்தில் இருந்தார்கள்.

**ம**றுநாள், அலுவலகத்தில் என் நண்பர் வழக்கத்துக்கு மாறாக ரப்பர் செருப்பை அணிந்து வந்திருந்தார். ''என்னாச்சு?'' என்று கேட்டேன்.

''நேற்று கோயில்ல என் செருப்பு காணாமப் போச்சு'' என்றார்.

''நானும் என் காஸ்ட்லி செருப்பை நேற்று கோயிலில் தொலைச்சிட்டேன்'' என்று சொன்னேன்.

அவர் நம்புவதாக இல்லை. என் கால்களைப் பார்த்து சிரித்துக் கொண்டே போய் விட்டார். நான் எப்போதும் போல அந்தப் பழைய ரப்பர் செருப்பையே அணிந்திருந்தேன். ●



**''2004 தேர்தலில் எதிரணியில் இருந்துவிட்டு தற்போது எங்கள் கூட்டணியில் இணைந்து அடுத்த 2014 தேர்தலில் எதிரணிக்குத் தாவ இருக்கும் தலைவர் சோமதாஸ் அவர்களே!''**

**- தீபா**

''ஏனுங்க பழசு போரடிக்குதுங்க. புதுசா யங்கா வரணுங்க... அப்பதாங்க கலகல லகலகன்னு இருக்கும்'' என்றார் சவுடேஸ்வரி வித்யாலயாவில் பன்னிரண்டாம் வகுப்பில் நுழையும் பாக்கியலட்சுமி.

நாம் கேட்ட கேள்வி, 'உங்களுக்கு வோட்டுரிமை கொடுத்தா யாருக்கு வோட்டுப் போடுவீங்க?'

பி.எஸ்.ஜி. கலைக் கல்லூரியில் படிக்கும் ருமிதா, ''என் சாய்ஸ் கலாம் தான். ஆட்சியின் தலைமையை அவர் கிட்டதான் கொடுக்கணும்'' என்றார்.

சி.ஏ. படிக்கும் சிவக்குமார், ''நான் வோட்டுப் போடப் போவது ரகசிய மாகத்தான் இருக்க வேண்டும். இருந் தாலும் என்னுடைய சாய்ஸ்- இளமை யும் திறமையும் இருக்கணும்'' என்றார்.

யூத் ஏரியா

''எங்களது லேட்டஸ்ட் ஹீரோ சூர்யாதான். அயனில் ரொம்பவும் ஸ்மார்ட்டா இருக்கிறார். அவர் மட்டும்

# ஸ்வீட் ராகுல் Vs ஸ்மார்ட் சூர்யா

தேர்தலில் நின்னா எல்லாம் சேர்ந்து அவரை ஜெயிக்க வைச்சுடுவோம்.'' -பிரதமரா ஸ்வீட் ராகுல் வரணும்; தமிழ் நாட்டுக்கு விஜயகாந்த்தான் பொருத்தம் என்று கோரஸ் போட்டவர்கள் கடைசியில் இப்படி காலை வாரினார்கள்.

(மொத்தத்தில் நம் வோட்டை யாருக் குப் போடுவது என்று மறந்தே விட்டோம்)

எம்.பி.ஏ. படிக்கும் ஸ்வீட்டி, ''என் அப்பாவின் கார்மெண்ட் பிஸினஸுக்கு ஹெல்ப் பண்ணணும். அதுதான் இலட்சி யம்'' என்றார்.

''டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த சேனல் எது?'' என்றோம்.

''கார்ட்டூன்தான்'' என்றார்.

### தேர்தல் தெறிப்புகள்

எதிரெதிராய்க் களம்கண்டாலும்
காற்று வீசும்
திசையிலேயே பறக்கின்றன
எல்லாக் கட்சிக் கொடிகளும்

ஜனநாயகம் எங்கே?
தேர்தல் நேரத்தில்
தேடப்படுகிறது
பிரியாணிக்குள்.

- கோவி.லெனின்




''ருமிதாவும், நானும் எம்.பி.ஏ. எழுத பெங்களூர் போனோம். ஜாலியாக சம்மரை மறந்து என்ஜாய் பண்ணினோம். அடுத்தது ஏற்காடுதான் எங்கள் பிளான்'' என்றார்.

சிவக்குமார் சிறந்த யோகா வீரர். ''இந்தியா சார்பில் சிங்கப்பூரில் போட்டியிடத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதால் நேரம் சரியா இருக்குது. இருந்தாலும் வெற்றிபெற்று நாட்டுக்குப் பெருமை சேர்ப்பது பெரிய சாதனைதானே'' என்கிறார். கலக்குங்க!

''சம்மருக்கு நிறைய ஐடியாக்கள் இருக்கிறது. முக்கியமா ஓவியம் வரையக் கத்துக்கணும். யோகா பயிற்சி எடுத்துக்கணும்'' என்றார் ராஸ்மிதா.

ருமிதா, பேஷன் டிசைனிங்கில் நிறைய சாதனைகள் பரிசுகள் வாங்கியிருக்கார்.

சிவக்குமாருக்குப் பிடித்த ஹீரோயின் ஜெனிலியாவாம். விடுமுறை நாட்களில் வசதியற்ற ஏழை மாணவர்களுக்கு யோகா பயிற்சி கொடுப்பாராம் இலவசமாக.

சரி எல்லோரும் சமர்த்தாக கோடையைக் கொஞ்சம் கடிங்க (அதாவது கோடைக்கு மேட்சா கடி ஜோக் சொல்லுங்க) என்றோம்.

''உச்சி வெயில் உச்சியில இருக்கும். ஆனா கத்திரி வெயில் 'கத்திரி'யில் இருக்காது'' என்று காய வைத்தார்கள்

''லவ்வருக்கும் செல் போனுக்கும் என்ன ஒற்றுமை? ''

''பேலன்ஸ் இல்லைன்னா ரெண்டுமே பேசாது.''

- ஆர்.பாலா





## எழுத்து எக்ஸ்பிரஸ்

# எங்கே போகிறது இந்து மதம்?

வயல்களில், சோளக்காடுகளில் மண் பானை சட்டித் தலையில் கரும்புள்ளி குத்திக் கொண்டு, வைக்கோல் சதை பிதுங்க, சிலுவையில் அறையப்பட்ட மாதிரி கைகளை அகல விரித்தபடி பறவைகளுக்குப் பயங்காட்டிக் கொண்டு நிற்கும், அதிகாரம் செத்த சோளக் கொல்லை பொம்மைகள் எதற்காக வைக்கப்பட்டன?

யாரோ ஒரு நபர் காவலுக்கு நிற்பதாக பட்சி பறவைகளுக்கு, குஞ்சு குளுவான்களுக்கு, சில திருட்டுப் பயல்களுக்குப் பயங்காட்ட பண்ணைக்காரர்கள் செய்த பயமுறுத்தல் ஏற்பாடு அது. ஆனால் நாளாக நாளாக காக்கா குருவி அதன் சட்டில்தலையில் உட்கார்ந்து நிதானமாக எச்சம் போட்டு அதிகாரமிழந்த அந்தப் பொம்மையை அதிகமாக அசிங்கப்படுத்தும். இன்றைக்கு மதம், மதத்தின் அடையாள பூமியாகிய கோயில்கள், அதன் உள்ளே ஏக கம்பீரத்துடன் வீற்றிருக்கும் சாமிசிலைகள் எல்லாமே இந்தச் சோளக் கொல்லை சமாசாரம் ஆக ஆகிவருகின்றன. இப்படிச் சொல்லும் எனக்கு நாத்திக முத்திரை குத்தி காயப்படுத்துவதற்குமுன் கொஞ்சம் யோசிக்க வேண்டுகிறேன்.

இன்றைக்கு நிஜமாகவே கடவுளுக்குப் பயப்படுகிறவர்கள் இருக்கிறார்களா என்ன? சாமிக்குப் பக்கத்திலேயே இருப்பவர்கள் கூச்சமே இல்லாமல் எத்தனை அதர்மம் செய்கிறார்கள்? உலகுக்கே நீதி செலுத்தும் அதிகாரம் உடைய சாமிமார்கள் எல்லாம் மிகச் சிறிய முன்சிப் கோர்ட்டு முதல் சுப்ரீம் கோர்ட்டு வரையிலான நீதிபதிகள் பிறப்பிக்கப் போகும் உத்தரவுகளை எதிர்பார்த்து வாதியாகவோ, பிரதிவாதியாகவோ தவம் கிடக்கிறார்கள் தெரியுமா? அண்டசராசரத்தையே ஆட்டி வைக்கும் நடராஜாவை ஆட்டிப் படைக்கும் அதிகாரம் தீட்சிதர்களுக்கா... இல்லை தமிழக அரசுக்கா என்பதைத் தீர்மானிக்கப் போகிறவர் நடராசர் இல்லை; ஒரு நீதியரசர்.

காரணம் என்ன? ஒரு காலத்தில் நமக்குக் கோயில்கள்தான் எல்லாம். நியாய சபை, பஞ்சாயத்து, கோயில் ஆலமரமே! கோயில் கோபுரங்களில் பாதுகாக்கப்பட்ட தானியங்கள் மூலம், பஞ்சகாலத்தில் படியளப்பது கோயில் நெற்களஞ்சியமே. விஷக்கடி, நோய் தீர்ப்பு கோயில்

மருந்தகமே. குடிநீர், குளிநீர் கோயிலின் கொடையே... பயணிக்கும் யாத்ரிகர்கள் பயமின்றி தங்குவதற்கும் இரவுப் பொழுதைக் கழிப்பதற்கும் பயன்பட்ட Highway Inn கோயில் மண்டபமே. நாட்டியம், பண், இசை, கூத்து, சிற்பம் என்கிற கலை இலக்கிய களம் கோயில் முற்றங்களே... ஆரம்பப் பாடசாலைகள் வேதாகம கல்லூரிகள் கோயில்கள்தான். வாழ்க்கை, மரணம் பற்றிய சகல பயங்களுக்குமான தீர்வாக அ'பயம்' காட்டி 'நிர்ப் பயா' என்கிற பேரோடு கடவுள் காட்சி கொடுத்த இடம் கோயில்களே.

சிற்றரசர்கள் மாதிரி கோயில்களின் ஆளுமை கூனிக் குறுகி சிறுத்து விட்டது. ஒருசில தர்மாத்மாக்கள் தயவிலும், பெருவாரியாகச் சமூகத்துக்குக் கூசாமல் அநீதி இழைப்பவர்கள் போடும் பிச்சையிலும் கோயில்கள் நிர்வகிக்கப்படுவது கலிகாலத்தின் கொடூரம்.




**கோயிலின் உள்ளே ஏக கம்பீரத்துடன் வீற்றிருக்கும் சாமி சிலைகள் சோளக் கொல்லை சமாசாரமாக ஆகி வருகின்றன.**

மாவட்ட ஆட்சி அதிகாரிகள், காவல் துறை, நீதித் துறை கட்டுப்பாட்டில் கவனம் செலுத்துகிற மக்கள் தர்ம அதர்மம், பாவ புண்ணியம் பற்றிக் கவலைப் படுகிறார்களா? தவறு செய்தவர்களைத் தெய்வம் தண்டிக்கும் என்கிற நிஜமான - நிஜமான பயம் எத்தனை சதவிகித மக்களுக்கு இருக்கிறது?

சமயச் சார்பற்ற ஆட்சி என்பது சகல மதங்களையும் சமமாக மதிக்கும் ஆட்சி என்கிற அர்த்தத்தை இழந்து - சமயங்களின் மீது நம்பிக்கையோ மரியாதையோ அற்ற ஆட்சி என்று கொச்சைப்படுத்தப்பட்டு விட்டது.

**ரா**ஜாஜி, கவர்னர் ஜெனரலாக இருந்த போது, ஒரு கோயிலுக்குச் சென்றிருந்தார். உள்ளே அவரை கவர்னர் ஜெனரலாகவே கோயில் நிர்வாகம் கும்மி அடித்தது. கோபமடைந்த அவர் ''என் கவர்னர் ஜெனரல் பதவியை, வாசலில் கழற்றிவிட்ட செருப்பின் மேலே வைத்து விட்டு உள்ளே வந்திருக்கிறேன். வெளியில் போகும்போது இரண்டையும் மாட்டிக் கொள்வேன்'' என்றாராம். ஆத்திக அரசியல்வாதிகள் கோயில்களில் இப்படியா நடந்து கொள்கிறார்கள்?

ஜவஹர்லால் நேரு தாம் பிரதமராக இருந்தபோது, ஜனாதிபதியாக இருந்தவர் கோயில் கும்பாபிஷேகத்தில் பங்கேற்பதாக இருந்ததை விரும்பவில்லையாம். காரணம் சமயச் சார்பற்ற அரசின் தலைவர் சமயம் சார்ந்த விழாவில் பங்குபெறக் கூடாது என்றாராம். அரசர்கள்தான் இந்தியாவில் பெரிய பெரிய கோயில்களைக் கட்டினார்கள். ஆனால் அரசு கோயிலோடு தொடர்புடையதல்ல என்ற எண்ணம்

கோயில்களுக்கு எதிரான முதல் இடி.

அன்று செல்வாக்காக இருந்த கோயில்கள் இன்று பிரார்த்தனைகளை நிறைவேற்றும் வெறும் தரகு மண்டலங்களாகத் தரம் தாழ்ந்தது ஏன்?

கிறித்தவர்களும் இஸ்லாமியர்களும் தங்கள் சமயத்தைக் கற்றுக் கொள்ளும் பள்ளிகளாகத் தங்கள் வழிபாட்டுக் கூடத்தை அமைத்திருக்கிறார்கள். ஓர் இந்து கோயிலுக்குப் போனால் அவனுக்கு எதைக் கற்றுத் தருகிறார்கள்? கற்றுத் தர யார் இருக்கிறார்கள்? என்ன போதிக்கப்படுகிறது? இதுபற்றிக் கவலைப்பட வேண்டியவர்கள் கவலைப்படவில்லையே. ஓர் இந்து இந்துவாக - மனிதனாக வாழ்வதற்கான எந்தக் கல்வியும் கோயில்களில் கிடைக்காதபோது கோயில் தனது முக்கியத்துவத்தை இழக்கத் தொடங்கியது.

இந்தச் சமயத்தில் செல்வாக்கு பெற்றவைதான் மடங்கள். காரணம் அங்கு திருமடத்தின் தலைவர் குரு. கடவுளுக்கு நிகரானவராக ஏற்கப்படக் கூடியவர். உங்களைக் கடவுளின் அண்மைக்கு அழைத்துச் செல்லும் அக்கறை மிக்கவர். இந்த எண்ணமே திரு மடங்களின் செல்வாக்கு வளர காரணம் ஆயிற்று.

ஸ்ரீ ராமானுஜர் ராமாயணம் சொல்லிக் கொண்டிருந்தபோது விபீஷண சரணாகதி கட்டம். சரணம் என்று வந்த விபீஷணனைச் சேர்ப்பதா வேண்டாமா என்று ராமர் பலரோடும் ஆலோசனை செய்கிற இடம். உறங்காவில்லி என்ற சீடர் சட்டென்று எழுந்து ஸ்ரீராமானுஜரிடம்கூட சொல்லிக் கொள்ளாமல் வெளியே புறப்பட்டார். பண்பு மிகுந்த தம் சீடரின் செயலால் திகைத்த ஸ்ரீராமானுஜர் 'என்ன?' என்று கேட்க, 'விபீஷணனைப் போன்ற தர்மாத்மாக்களையே சோதித்து தம்மோடு சேர்க்கும் இந்தப் பெருமாள் என்னை எப்படி நாளை வைகுண்டத்தில் சேர்ப்பார்? அதுதான் வேறு ஸ்வாமியைத் தேடிப் புறப்பட்டேன்' என்றார் சீடர்.

பலிச்சென்று ஸ்ரீராமானுஜர் சொன்னாராம். 'ஓய்... அது ராமர் கோஷ்டி. இது ராமானுஜன் கோஷ்டி. உம்மை வைகுண்டத்தில் விட மறுத்தால் நானும் புக மாட்டேன். நான் புகாதவரை என் குருவும் புகார். கடைசியில் சகலர்க்கும் குருவான ஸ்ரீ நாராயணனே வெளியில்தான் நிற்க வேண்டிவரும்' என்றார். சீடர்களைக் கரையேற்றும் முழுப் பொறுப்பும் குருவுடையது என்று உறுதியானதும் குரு பீடங்கள் கோயிலை விடவும் முக்கியத்துவம் பெற்ற இடங்கள் ஆயின.

இன்னொரு சம்பவம். தம் சீடராகிய கிரீஷ் சந்த்திர கோஷ் என்பவர், குடி முதலிய ஒழுக்கமற்ற பாவச் செயல்களைச் செய்யாமல் தம்மால் இருக்க முடியவில்லை என்று ராமகிருஷ்ணரிடம் கதறிய போது, 'எந்தப் பாவம் செய்ய நேர்ந்தாலும் முழுவதும் என் குருவுக்கே என அர்ப்பணம் செய்' என்றார் குருதேவர். இப்படி ஒரு குருவைப் பார்க்க முடியுமா? கிரீஷும் ஆசைதீர பாவம் செய்துவிட்டு தம் குருவுக்கு அர்ப்பணமும் செய்தார். ஆனால் அடுத்தடுத்து அவரால் அப்படி அர்ப்பணிக்க முடியவில்லை.





எத்தனை உயர்ந்த மனிதர் ஸ்ரீராம கிருஷ்ணர்! செய்யாத பாவங்களுக்காக அவர் மேலும் மேலும் பாவி யாவதா?' என்று துடித்தார். முடிவில் வேறு வழியின்றி தம்மைத் திருத்திக் கொண்டார்.

பக்தனின் முழு வாழ்க்கைக்கும் பொறுப்பேற்றுக்கொள்ள குருமார்கள் முன்வந்ததால் முக்கியத்துவம் கோயிலிருந்து மடங்களுக்குக் குடிபெயர்ந்தது. மடங்களில் கதவுகளை விட தாழ்ப்பாள்கள் வலிமை பெறத் தொடங்கின. பெருவாரியான மடங்களில், ஆத்ம விசாரம் குறைந்து தேகாபிமானம் பெருகியது. பள்ளிக் கூடங்களாக இருந்த மடங்கள் பள்ளியறைகளாக மாறின. காவியைக் கொச்சைப்படுத்திய ஜமீன்தார்களின் கலவரபூமியாயின பல மடங்கள்.

இப்போது மறுபடியும் வேறு ஒரு பற்றுக்கோடு தேவைப்பட்டது பக்தனுக்கு. நவீன குருமார்கள். இவர்களைக் குடும்பஸ்தன் இல்லை என்றும் சொல்ல முடியாது. சன்யாஸி இல்லை என்றும் சொல்ல முடியாது. மடம் என்றும் மடம் இல்லை' என்றும் சொல்லிவிட முடியாது. குரு என்றும் கொண்டாட முடியாது. குரு இல்லை என்றும் தள்ளிவிட முடியாது. எல்லாம் உணர்ந்த ஜீவன்முக்தர்கள் என்று ஏற்கவும் முடியாது. எதுவும் அற்ற சராசரி சம்சாரிகள் என்று ஒதுக்கவும் முடியாது. முக்தியை நோக்கிப் பயணிக்கும் முமுட்சுக்களும் அல்லர். முடிச்சுகளில் சிக்கி மூச்சுத் திணறும் அபிஷ்டுக்களும் அல்லர்.

**ஆசிரமங்கள் என்ற சல்லிவேர்களை நம்பி இந்து மதம் நிற்பது சரிதானா என்று இந்துக்கள் சிந்திக்க வேண்டும்.**

இப்படிப்பட்ட இள நிலை ஞானிகள் மக்களுக்கு அருகாமையில் கிடைத்தனர். அவர்களது வீடுகளே ஆசிரமங்கள் ஆயின. பூஜையைக் குறைத்தனர். பேச்சைக் கூட்டினர். தியானத்தை விட தியானம் பற்றி சொற்பொழிவு செய்வதில் அதிக நேரம் செலவானது. ஞானத்தை விட ஞானம் பெறுவது எப்படி என்கிற வகுப்புகளில் கவனம் திரும்பியது. கொஞ்சம் பஜனை, கொஞ்சம் தியானம்... கொஞ்சம் யோகா, கொஞ்சம் உடற்பயிற்சி, கொஞ்சம் மூச்சுப் பயிற்சி, கொஞ்சம் தன்னம்பிக்கை வகுப்பு, கொஞ்சம் ஞான விசாரம், கொஞ்சம் துணிச்சல், கொஞ்சம் சஞ்சலம், கொஞ்சம் பிரயோஜனம் என்று சின்னச் சின்ன கல்வி வேர்களால் தங்கள் சத்சங்கங்களைப் பெரிதுபடுத்திக் கொண்டே போகிறார்கள். கோயில்கள் என்ற ஆணிவேரில் நிற்பது குறைந்து, குருமார்களின் ஆசிரமங்கள் என்ற சல்லிவேர்களை நம்பி இந்து மதம் நிற்பது சரிதானா என்று இந்துக்கள் சிந்திக்க வேண்டும்.

கோயில்கள் தங்கள் பழைய ஆழ அகலங்களை உடைய, தெய்விக அலை பரப்பும் ஞானக் கடல்களாக, பரிகாரங்களுக்கான வியாபார கேந்திரங்கள் என்கிற ஆபத்திலிருந்து பக்திப் பயிர் வளர்க்கும் ஞானப் பண்ணைகளாக மாற வேண்டும் என்கிற என் எதிர்பார்ப்பைச் சமூகத்தின் முன் வைக்கிறேன்.

இனி உங்கள் இஷ்டம்... கடவுளின் இஷ்டம்!

காட்டுப்பன்றி மிக்க மூர்க்கமான கொடிய மிருகங்களில் ஒன்று. காயம் பட்ட பன்றியைப் போல கொடியது வேறொன்றுமில்லை. புலி, சிறுத்தை, கரடி, யானை இவற்றைச் சுடும்போது மிகவும் சக்தி வாய்ந்த குண்டுகளைப் பயன்படுத்த வேண்டும். துப்பாக்கிக்கும் ரைபிளுக்கும் மிக்க வேறுபாடு உண்டு. துப்பாக்கி குண்டு நேராகச் செல்லும். ரைபிள் குண்டுகள் அதிவேகமாகச் சுழன்று செல்லக் கூடியவை.



* சேத்துமடையில் உறவினர்களுடன்...

துப்பாக்கியின் தோட்டாக்கள் கனமான அட்டையில் வடிவமைக்கப்பட்டிருக்கும். ரைபிள் தோட்டாக்கள் பித்தளை போன்ற உலோகத்தில் அமைக்கப்பட்டிருக்கும். குழாய் போன்ற துப்பாக்கிகளில் வெடி மருந்திட்டு நுனியில் குண்டுகளைப் பொருத்தியிருப்பார்கள். இவற்றிலும் பலவகை உண்டு. எந்தெந்தத் தோட்டாக்களை எந்தெந்த மிருகங்களுக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற நியதியும் உண்டு.

மிருகங்கள் உயிர்போகும் வரை மனிதனை எதிர்த்துத் தாக்கும். ஆகையால் துப்பாக்கியைக் கையாள்பவர்கள் எச்சரிக்கையுடனும் சமயோசிதமாகவும் நேரத்துக்குத் தக்கவாறு கையாள வேண்டும்.

பொதுவாக வனவிலங்குகள் மனிதர்களைக் கண்டவுடன் வனத்தினூடே ஓடி மறைந்து விடும். சில விலங்குகள் எதிர்த்து வந்து தாக்கும். இந்த இரண்டு நேரங்களிலும் நாம் அதைச் சுட்டு வீழ்த்த தயார் நிலையில் இருக்க வேண்டும் என்று எல்லாவித வழிகாட்டுதல்களையும் கொடுத்து முடித்தார் முத்து மாணிக்கம்.

பொழுது விடிந்தது. இயற்கை அழகு கொஞ்சும் சேத்துமடையின் வனப்பில் லயித்தார் சிவாஜி. அடர்ந்த காடுகளின் அறிமுக வகுப்பு போல் அமைந்திருந்தது சேத்துமடை. போருக்குப் போவது போன்ற முன்னேற்பாடுகள் தொடங்கின. முறைப்படுத்தப்பட்ட வேட்டை என்றால் என்னவெல்லாம் இருக்க வேண்டுமோ அத்தனையும் ஒன்வொன்றாகச் சீரமைக்கப்பட்டன.

அடர்ந்த காட்டில் செல்லும்போது, மரக்கட்டைகளோ அல்லது கொடிகளோ, துப்பாக்கி விசையில் பட்டு வெடிக்க நேரிடும். அடிக்கடி உடன் வரும் நபர்களை எச்சரித்து வரவேண்டும்.

மேலும் நெடுந்தூரம் செல்ல நேரிடும் வேட்டைகளில், குறித்த நேரத்தில் திரும்பி வர இயலாது. இரவு நேரங்களில் தேவையான ஒளிவிளக்கும் மிகவும் அத்தியாவசியமானது. அனுபவசாலிகளைத் தவிர வனங்களில் திசைகளையே கண்டறிய முடியாது.

புதர்கள் குறைந்த ஒரு பாறை

மரபின்மைந்தன் முத்தையா




# உஷ்... பேசாதே!

யருகில் தீமூட்டி விடியும்வரை காத்திருந்து பின்பு செல்வதே எதிர்பாராத ஆபத்துகளைத் தவிர்க்கும் வழி.

இதையெல்லாம் நல்ல வேட்டை அனுபவம் உள்ளவர்களைத் தவிர, மற்றவர்களால் ஒழுங்காகச் செய்ய முடியாது. முத்துமாணிக்கக் கவுண்டரின் ஒன்றுவிட்ட தம்பிகளான ராஜாராம், பொன்னுசாமி ஆகிய இருவரும் மிகவும் கைதேர்ந்தவர்கள். 'வேட்டைக்குச் செல்லுகிறோம்' என்று சொன்ன மாத்திரத்தில் இவற்றையெல்லாம் தயார் செய்து ஜீப்கள் சகிதம் தயாராக இருப்பார்கள்.

ஒளிவிளக்கை இயக்குவதிலே முத்துமாணிக்கத்தின் இன்னொரு ஒன்றுவிட்ட சகோதரர் சின்னுச்சாமி மிகவும் கைதேர்ந்தவர். இரவு நேரங்களில் காடுகளில் சர்ச் லைட் என்னும் ஒளி விளக்குகளால், மிருகங்களைத் துல்லியமாகக் கண்டறிவதில் நிபுணர்.

ஜீப்களில் செல்லும்போதே இந்த விளக்குகளை, எல்லா திசைகளிலும் இயக்க வேண்டிவரும். விளக்கு ஒளியில் தூரத்தில் நிற்கும் மிருகங்களின் கண்ணொளி மிகப் பிரகாசமாகத் தெரியும். புதர்களின் உள்ளே இருக்கும்போது அந்த மிருகங்களை, முழுவதுமாகக் காண இயலாது. கண்ணொளி மூலமாகவே அது எந்த மிருகம் என்பதைக் கண்டறிவது அசாத்தியமான திறமையாலும் அனுபவத்தாலும் மட்டுமே நிகழக்கூடியது.

கண்களுக்கு நடுவே இடைவெளி

குறைந்திருந்தால் அது கேளையாடு. கண்கள் மேலும் கீழுமாக அசைந்தால் அது புள்ளிமான். இடைவெளி சற்று அதிகமாக இருப்பின் அது காட்டெருமை அல்லது கலைமான். தீப்போல பிரகாசித்தால் அது, புலி அல்லது சிறுத்தை, ஒரே கண் நிலத்திலிருந்து சற்று உயரமாகத் தெரிந்தால் அது யானை என்பதையும் பார்த்தவுடனே கூறிவிடும் திறமையைப் பெற்றவர் சின்னச்சாமி. யானையின் முகத்திலே சர்ச் லைட் டைப் போட்டு பார்த்தால் கூட ஒரு கண்தான் பிரதி பலிக்கும். அதற்குப் பருத்த தலை. கண்கள் பக்கவாட்டில் இருப்பதால் ஒரு கண்தான் பிரகாசிக்கும்.

சில நேரங்களில் பறவைகளின் கண்ணும் ஒன்று மட்டுமே பிரகாசிக்கும். யானை நிற்குமிடத்தில் பறவைதான் உள்ளது என்று அசட்டையாக அணுகினால் வரும் ஆபத்தைத் தவிர்க்க முடியாது. யானையின் மூர்க்கத்தனமான தாக்குதலுக்கு ஆளாக நேரிடும்.

**வெ**யில் விழுந்தும் விழாத மாலைப் பொழுதில் வனம் நோக்கிக் கிளம்பியது வாகனங்களின் அணிவகுப்பு. வனத்தின் எல்லைக்குள் நுழைந்ததுமே உத்தரவுகளைப் பிறப்பித்தார் முத்துமாணிக்கம்.

ஜீப்பை அவர் ஓட்ட அருகில் சிவாஜி கணேசன் அமர்ந்தார். பின்னால் யாரெல்லாம் அமரவேண்டும். யார் கையில் எந்தத் துப்பாக்கி இருக்கவேண்டும் என்பது வரை முத்துமாணிக்கம் துல்லியமாக வரையறுத்துச் சொன்னவிதம், வந்தவர்களுக்கு பிரமிப்பூட்டியது.

"யாரும் எக்காரணம் கொண்டும் வாய்திறந்து பேசாதீர்கள். நான் சொல்கிற வரைக்கும் சுடாதீர்கள்"

அதற்குக் காரணம் உண்டு. எதிரே எப்போது என்னென்ன விலங்குகள் வரும் என்று யாருக்கும் தெரியாது. முன்னால் ஒரு முயல் ஓடுகிறதென்றால் 500 எக்ஸ்பிரஸ் துப்பாக்கியால் சுட்டுப் பயனில்லை. முயல் சின்னச் சின்னத் துணுக்குகளாய் சின்னாபின்னம் ஆகிவிடும்.

"யாரும் எக்காரணம் கொண்டும் வாய் திறந்து பேசாதீர்கள். நான் சொல்கிற வரைக்கும் சுடாதீர்கள்" என்று கண்டிப்பாகச் சொல்லியிருந்தார் முத்துமாணிக்கம்.

அவர் ஓட்டிக் கொண்டுபோக, பக்கத்தில் அமர்ந்திருந்த சிவாஜி கணேசன் கைகளில் 423 ரைபிள் இருந்தது. அடர்ந்த வனத்தில் இருபுறமும் எத்தனையோ விலங்குகள் தட்டுப்பட்டன.

யாரும் யாரோடும் பேசவில்லை. பேச வேண்டாம் என்று முத்துமாணிக்கம் சொன்னதற்கு காரணம் இருந்தது!

(தொடரும்)




- உ.குணசீலபாண்டியன்

## நீங்கள் கேட்டவை-தராசு

# பிரித்து மேய்ந்து விடுவது என்றால் என்ன?

● **என்.காளிதாஸ், சிதம்பரம்.**

*? வருமானத்துக்கு ஏற்பவே விலைவாசி உயர்ந்துள்ளது என அமைச்சர் பொன்முடி கூறியுள்ளாரே?*

! அவர் சொன்னது சரிதான். ஆனால், தம்முடைய வருமானத்துக்குத் தக்கபடி என்பதை மட்டும் சொல்லவில்லை; அவ்வளவுதான்.

● **ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி**

*? தேர்தலுக்குப் பின் ஜெயலலிதா பிரதமராகும் வாய்ப்பு வந்தால், ம.தி.மு.க. ஆதரிக்கும் எனக் கூறுகிறாரே வைகோ?*

! வைகோவைத் தொடர்ந்து ராமதாஸும் அதை ஒப்புக் கொண்டுவிட்டாரே! பிறகென்ன, வேட்பு மனு தாக்கலுக்கு இரட்டை நாயன ஊர்வலம்தான்! கம்யூனிஸ்டுங்க ஒத்து ஊதுவாங்களான்றது தான் சந்தேகம். அதனால் சுருதி சேராமல் போகலாம்!



✱ பிரித்து மேய்ந்தவர்!



✱ அந்தர் பல்டி!

● **பெ.சந்திரசேகர், ஸ்ரீவில்லிபுத்தூர்.**

*? கேரளாவில் நடந்த லோக் சபா தேர்தலில் 74 சதவிகித வாக்குப்பதிவு நடைபெற்றுள்ளது என்பதை, பெரிய சாதனையாகப் பேசுகிறார்களே - இது சரியா?*

! நாடெங்கும் வாக்குப் பதிவு சதவிகிதம் குறைந்து வருகையில் இது வரவேற்கத்தக்கதே. என்றாலும், கேரளாவில் கல்வி அறிவு பெற்ற மக்கள் எண்ணிக்கை மிக அதிகம் என்பதை நோக்க, வாக்குப் பதிவு இதைவிடவும் கூடுதலாக இருந்திருக்க வேண்டும்.

● **ரேவதிப்ரியன், ஈரோடு.**

*? அரசு பொது வேலை நிறுத்தம் அறிவித்த தினத்தில் டாஸ்மாக் கடைகளில் மட்டும் விற்பனை கனஜோராக நடந்துள்ளதே?*

! பின்னே விற்பனைக் குறியீடை உயர்த்தியாச்சு. லீவ் நாளை விட்டா வியாபாரம் பாதிக்குமில்லே! அதனால் அங்கு மட்டும் கடை அடைப்பு கிடையாது!

● **ஆர்.அஜிதா, கம்பம்.**

*? ''தவிர்க்க முடியாத சூழ்நிலை உருவானால் பிரதமர் பதவியை ஏற்பேன்'' என்று பிரகாஷ் கராத் (மார்க்ஸிஸ்ட் கட்சிப் பொதுச் செய*

லாளர்) தெரிவித்துள் ளாரே?

! ஆஹா! எத்தனைவித பிரதமர்கள் நம் நாட்டுக்கு! நிஜப் பிரதமர், நிழல் பிரதமர், எதிர்காலப் பிரதமர், கற்பனைப் பிரதமர், கனவுப் பிரதமர், தவிர்க்க முடியாத நிலையில் பிரதமர்!



* இரட்டை....

● வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை-61 ❑

? உ.பி.யில் கான்பூர் அருகில் உள்ள ஒரு கிராமத்தில், வோட்டு கேட்க வருவோர் மீது குறி பார்த்து செருப்பு வீச பயிற்சி எடுத்துக் கொள் கிறார்களாமே மக்கள்? இது கேடு கெட்ட காரியம்தானே?



* ...நாயனம்!

! சந்தேகமென்ன? அவ்வாறு எறிந்த ஒருவர் மன்னிக்கப்பட்டுவிட்டதுடன் பிரபலமும் ஆகிவிட்டதால் தோன்றும் இந்தக் குயுக்தி யோசனை, வீழ்ந்து வரும் பண்பாடு, நன்னடத்தை நெறிகளின் அறிகுறி. அரசியல்வாதிகள் தங்கள் நடத்தை மூலம் ஆத்திரம் ஊட்டு கிறார்கள் என்றாலும், வாக்குச் சீட்டைப் பயன்படுத்தித்தான் அவர்களைத் தண்டிக்க வேண்டுமேயொழிய, காலணி களை வீசி அல்ல.

● அ.அப்துல் காதர், சென்னை-45.

? ''நியாயமாக தேர்தல் நடந்தால் நாங்கள்தான் வெற்றி பெறு வோம்'' என்கிறாரே கார்த்திக்?

! ஆஹா! ஒரு 'ஆல்' எவ்வளவு பாதுகாப்பு தருது பாருங்க, பெரிய கதை அளக்க!

● லதா ரங்கன், சென்னை-94.

? பெண்களும் கூட இலஞ்சம் வாங்கி, கைதா கும் நிலை குறித்து?

! பெண்களும் 'கூட' என்று கேட்கும் அளவில் இன்று பெண் குலம் இல்லை. அவர்கள் சமூக நீரோட்டத் தில் கலந்து, அதன் நல்லது கெட்டதான பாதிப்புகளை உணர்ந்து வருகிறார்கள். அரியாசனங்களை அலங் கரிக்கும் பெண்கள் மீதே லஞ்ச-ஊழல் குற்றச்சாட்டுகள் உள்ளனவே! வித்தியாசம் என்ன வென்றால், அவர்களை எளிதில் கைது பண்ண முடியாது; கீழ்மட்டப் பெண் அதிகாரிகள் சுலபமாய்ச் சிக்குவார்கள்.

● த.குமரவேல், பொள்ளாச்சி

? அன்றாடம் நாட்டு நடப் பைத் தெரிந்துகொள்ள பத்திரிகை கள் வாங்க முடியாதவர்களுக்குத் தான் தமிழக அரசு இலவச கலர் டீ.வி. வழங்குகிறது என்று அமைச்சர் அன்பழகன் தெரிவித் துள்ளாரே?

! ஆமாமாம்! 'கஞ்சிக் கில்லாட்டி என்ன; காஞ்சிப் பட்டு உடுத்திக்கோ'ன்னு அள்ளித் தர்ற கதைதான்!

● சிவ.இராமலிங்கம், ஆத்தூர் (தூத்துக்குடி)

? 'பிரித்து




* தெம்பூட்டும் இலட்சியம்

**மேய்ந்து விடுவது' என்றால் என்ன?**

! 'க்ளீன் போல்ட் ஆக்குவது' மாதிரி தமிழில் ஒரு சொல் அம்பு. உதாரணம் தேவைப்பட்டால், கலைஞர் உண்ணாவிரதம் பற்றி ஜெ. கமெண்ட்.

**● உமரி பொ. கணேசன், மும்பை**

**? இந்தியாவுக்காக உலகக் கோப்பையை வெல்லுவதே தனது இலட்சியம் என்கிறாரே டெண்டுல்கர்?**

! டெண்டுல்கரின் இந்த தெம்பான ஸ்டேட்மென்ட், உலகக் கோப்பையை வெல்லும் உத்வேகத்தை அணியில் உள்ள எல்லோருக்கும் வழங்கினால் சாத்தியம்தான்; மாறாக, 'ஈகோ' புகுந்தால் அசாத்தியம்.

**● பா. அசோக், ஸ்ரீவில்லிபுத்தூர்**

**? "விடுதலைப் புலிகள் இயக்கம், விடுதலை இயக்கமாக ஆரம்பித்து, நாளடைவில் தீவிரவாத இயக்கமாக மாறிவிட்டது" என்று அந்தர்பல்டி அடித்துள்ளாரே கலைஞர்?**

! இதில் பல்டி ஒன்றும் இல்லை; வரலாற்று உண்மை. அதை முழு மனதாக ஏற்கக் கஷ்டப்படுவதுதான் கலைஞரிடம் உள்ள தடுமாற்றம். அதனால்தான், 'பிரபாகரன் என் நண்பன்; ஆனால் மத்தவங்க கெடுத்துட்டாங்க' போன்ற அபத்தங்களும் ஆறு மணி நேர உண்ணாவிரதம் போன்ற காமெடிகளும் அரங்கேறுகின்றன!



★ பாதுகாப்பு ஸ்டேட்மென்ட்!



● பிரதமர்கள் பலவிதம்!



● வருத்தாத விலைவாசி!

**● வீர.செல்வம், பூம்புகார். ★**

**? தமிழகத்தின் முக்கியக் கட்சிகளான தி.மு.க.-அ.தி.மு.க. இலங்கைப் பிரச்னைக்கு இணைந்து செயல்பட ஏன் தயங்குகின்றன?**

! அதன் மூலம் கிடைக்கக் கூடியதாக அவை கருதும் அரசியல் ஆதாயத்தைப் பகிர்ந்துகொண்டுவிடக் கூடாது என்கிற சுயநலம்; ஈழத் தமிழர் நலனையும் மீறிய பரஸ்பர விரோத பாவம்!

**● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.**

**? சவால் - சவடால் - என்ன வேறுபாடுங்க?**

! குழந்தைகள் சண்டையில் நன்றாகத் தெரியும். 'சண்டைக்கு வர்றியாடா?' என சவால் விட்டுக்கொள்வார்கள். 'நாளைக்கு வாடா கவனிச்சுக்கிறேன்' என சவடாலும் விடுவார்கள். இப்போது சில அரசியல் பெரியவர்கள் நிலையும் அதுதான்! ●

**☐ ரூ. 150/- பரிசு பெறுபவர்: வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை-61.**

**★ ரூ. 75 பரிசு பெறுபவர்: வீர.செல்வம், பூம்புகார்.**





**கி**.சொக்கலிங்கம் முறையாக ஓவியம் பயின்றவர். நாகர்கோவிலிருந்து சென்னைக்கு இடம் பெயர்ந்தவர்.

பொருளாதார நெருக்கடியும் இறை நம்பிக்கையும் தமது உத்வேக சக்தி என்று கூறும் இவர், தமது ஓவிய மொழி, பூரண சாந்தியை வெளிப்படுத்த





# இறைவனின் நிறத்தில்...






முயல்வதும் சாந்திக்கு எதிரானதைச் சுட்டிக்காட்டுவதும் என்கிறார். நண்பர் கோதை. சிவக்கண்ணனின் வழிகாட்டலோடு, இறைவனின் நிறத்திலமைந்த ஓவியங்களை என் விரல் பிடித்து வரைவது இயற்கையின் அசைவுகள்தான் என்கிறார். ஓவியக் கண்காட்சிக்கு தயாராகும் சொக்கலிங்கத்தின் படங்கள் ஓவியப் பாடல்கள்.

– அமிர்தா

# தோட்டம் அழித்த

"மாமு அவன் பார்ட்டிக்கெல்லாம் வராத 'சட காமெடி பீஸ்' " என்ற நக்கல் பூசிய வார்த்தைகளை, குடிக்காத நண்பர்கள் பெறுவதுண்டு. குடிப்பவன்தான் லேட்டஸ்ட் நாகரிகம் அறிந்த யூத் என்ற அழகிய முட்டாள் பட்டத்தை விரும்பி சூட்டிக் கொள்ள முடியுமா? இதுவா நாகரிக வளர்ச்சி?

யானைக்கால் நோயால் வீங்கிய உடலின் ஒரு பாகத்தைக் காட்டி 'பார்த்தாயா என்னுடைய வளர்ச்சியை' என்று 'பந்தா' செய்து கொள்ளும் பரிதாபத்தை என்னவென்று சொல்வது? 'வீக்கம் வளர்ச்சியல்ல' என்பதை நாம் சுட்டிக்காட்டாத போக்குதான், வீக்கம் இல்லாதவர்களை வளர்ச்சியடையாத நறுக்கரிசிக்காரர்களாக, பழைமைவாதிகளாகப் பார்க்கும் போக்கு துவங்கக் காரணமாகிவிட்டது.

சமீபகாலமாக நடுத்தர வயது இலக்கியவாதிகளின் இறப்புப் பட்டியல் நீண்டு கொண்டிருக்கிறது. இந்த மதிநுட்பவாதிகளின் மரணத்துக்கு மதுதான் காரணம் என்று ஆதாரத்தோடு சொல்ல முடியும். இதற்கு நம் அறிவு ஜீவிகளின் மது ஆதரவுக் கட்டுரைகளும் ஒரு காரணம். திராவிடக் கட்சிகளின் அரசுகளோ, புறாக்களுக்குப் போதிய வருவாய் இல்லையென்று, வல்லூறுகளை புறா கூடுகளில் வாடகைக்கு அமர்த்துவதுபோல மதுக் கொள்கையை நடைமுறைப்படுத்துகிறது.

மேலை நாடுகளில் குற்றவாளிகளைக் கொல்லும் ஆதிமுறை ஒன்றுண்டு. குற்ற

அமிர்தம் சூர்யா

வாளியைப் படுக்க வைத்து, கையிலுள்ள ஒரே ஒரு ரத்தக் குழாயைத் துண்டித்து, அதன் வழியாக ரத்தம் மெல்ல சிறுகச் சிறுக உறிஞ்சப்படும். ரத்தம் குறையக் குறைய வலியில்லா மரணம் வாய்த்து விடும். இந்த முறையைத்தான் ஜனநாயக ரீதியில் நமது அனுமதியோடு டாஸ்மாக் வழியாக அரசு செய்கிறது!

மதுவிலக்கு பிரசாரத்தை எழுத்தில் அமுல்படுத்தியவன் வள்ளுவன். அவன் சொன்ன, நோய்க்கு சிகிச்சை அளிக்கும் முன் நோய்க்கான காரணத்தைக் கண்டு

# பெரியார்!

அதன் ஆணி வேரை ஆராய்ந்து நீக்க வேண்டும் என்ற சிந்தனை, சுதந்திரப் போராட்ட காலத்தில் புத்துணர்ச்சி பெறத் துவங்கியது. காந்திஜி, மதுவுக்கு எதிராக அறிவுரைகளால் நடத்தப்படும் வார்த்தை சிகிச்சைக்கு மக்கள் வசப்படமாட்டார்கள் என்றெண்ணி, அகிம்சை தென்றலின் வலிமையைக் கூட்டி செயல் சூறாவளியாக மாற்றத் திட்டமிட்டார். எனவே வட நாட்டில் போதை தரும் கள்ளுக்கு உதவும் ஈச்ச மரங்களை வெட்டிவிட உத்தரவு இட்டார். வடநாட்டில் கள் இறக்கப் படுவதைத் தவிர ஈச்சமரத்தின் பயன்பாடு அதிகமில்லை.

# தவணைமுறை தற்கொலை



அடக்கி வைத்த கோபத்தை வெளிப்படுத்தும் யுக்தியாக அகிம்சைவாதிகளுக்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது போல கள் இறக்கிய ஈச்சமரங்களை எல்லாம் வெட்டி வீழ்த்தினர்.

இச்செய்தியை காற்று சேதாரமில்லாமல் தமிழகத்தில் பரப்ப, அது ஈ.வெ.ரா. பெரியாரின் புத்தியில் குந்திக் கொண்டது. அப்போது தமிழகத்தில் தென்னை மரத்திலிருந்து அதிகம் கள் இறக்கப்பட்டது. தென்னை கற்பக விருட்சம். இளநீர் என்ற புனை பெயரில் இயற்கை மருந்தாக; சின்னா பின்னமாய்ச் சிதைந்தாலும் நலம் தரும் நாராக, நிழலைப் போர்த்தும் ஓலைக் கீற்றாக, தெங்கம்பழமாகி (அட தேங்காய்தாங்க!), செக்கில் நசுங்கி எண்ணெயாக, கடைசியில் கால்நடை தீவனமாக மானுட மகிழ்ச்சிக்கு ஆதாரமாயிருந்தது.

மனிதன்தான் ஆரோக்யப் பூவில் ஆணி அடிப்பது போல் அதிலிருந்து கள்ளை இறக்கி பகைமையின் சாபம் பெற்றான். போதை வந்தது; போகம் நின்றது. கனிவு நகர்ந்து காட்டுமிராண்டித்தனம் கூடியது. தன்னை மறந்தது - உழைப்பு நின்றது. அச்சாணி கழன்ற சக்கரமாய், குடும்பக் கடமை கழன்று விழுந்தது. குதூகலம் தேய்ந்து இல்லற மகிழ்ச்சி எலும்பும் தோலு மாய் ஆனது.

மதுவிலக்கு ஆதரவாளரான பெரியார், 'என்ன

**சமீப காலமாக நடுத்தர வயது இலக்கியவாதிகளின் இறப்புப் பட்டியல் நீண்டு கொண்டிருக்கிறது. இந்த மதிநுட்பவாதிகளின் மரணத்துக்கு மதுதான் காரணம்**

செய்யலாம்? எப்படி தனது ஆதரவுக் குரலைக் கல்வெட்டாய்ப் பதிக்கலாம்? மக்கள் மனத்தில் மதுவுக்கு எதிரான அதிரடி செயல் ஆவணமாகி நிற்க

**நிஜம்!**

**நூறு ரூபாய்க்குக் குடித்து, அரசுக்கு 4 கோடி ரூபாய் நஷ்டத்தைத் தந்த யதார்த்தம் இது...**



கோவையில் ரெயில் என்ஜின் கவ

# குடிபோதையில் ரெயிலை ஓட்டிச்சென்

வேண்டுமே' என யோசித்தார். சட்டசபை, பாராளுமன்றத்தில் ஒரு தீர்மானம் நிறை வேற்றும் முகமாய் மேசையை எல் லோரும் தட்டி, ஓசை எழுப்பி ஆதரவு தெரிவிப்பதுபோல 50 அல்ல... 100 அல்ல... ஐந்நூறு தென்னை மரங்களை தம் தோட்டத்திலிருந்து அடியோடு வெட்டி வீழ்த்தச் சொன்னார். ஓலை களோடும் மட்டைகளோடும் சடசடவென பேரிரைச்சலோடு அவை வீழ்ந்த சப்தம் மது அரக் கனின் அலறலாயிருந்தது.

ஈச்சமரமும் தென்னையும் ஒன்றா? இது உணர்ச்சி யில் எடுத்த முடிவு. பொருளாதார இழப்பு எவ்வளவு தெரியுமா? அடுக்கடுக்கான கேள்வி களை எழுப்பலாம். தமக் குத் தெரியாமல் தமது தோட்டத்திலிருந்து கள் இறங்கி அது எந்த ஒரு கடைக்கோடி தமிழ னின் போதைக்கும் காரணமாகி விடக்கூடாது என்கிற பெரியாரின் 'அறப் பதற்றம்' அபூர்வமானது. கொள் கைக்கும் வாழ்க்கைக்கும் இடை வெளியின்றி வாழ்ந்த பெரியாரின் பெயர் சொல்லும் கட்சிகளுக்கு என் றைக்கும் சாப விமோசனம் இல்லை. விமோசனம் என்ற பத்திரிகையே மது விலக்கு பிரசாரத்துக்காக மூதறிஞர் ராஜாஜி நடத்தியதுதானே? அட ஆமாம்!' என்று சசி யோசிக்கும் போதுதான் அப்பா தோளில் தட்டி சிந்தனையைக் கலைத்தார்.

''என்னப்பா?'' என்றாள் சசி. ''சசிம்மா என்னால முடியலம்மா. குடிக்கணும்னு திரும்பவும் தோணுதும்மா'' என்றார் கண்கலங்கி கெஞ்சலோடு. சசிக்கு 'பக்' கென்று இருந்தது!

**(தொடரும்)**

**எச்சரிக்கை!**

தற்கொலையின் நான்காவது தவணை' : நடுக்கம்.

''நானென்ன வேணும்னா குடிக்கிறேன். குடிக்கலைன்னா எந்த வேலையும் செய்ய முடியாதபடி கை நடுங்குதே ஸார்!''

''ஊழல் பணத்தில் லண்டனில் இரண்டு ஹோட்டல்களை ஜெயலலிதா வாங்கினார்'' என்ற குற்றச்சாட்டின் பேரில் வழக்கு பதிவு செய்த தமிழக அரசு இப்போது அந்த வழக்கை வாபஸ் பெற்றுவிட்டது. என்ன காரணம்? தி.மு.க. சட்டத்துறை செயலாளரும், தென்சென்னை தொகுதி தி.மு.க. வேட்பாளருமான ஆர்.எஸ்.பாரதியிடம் கேட்டோம்.

''ஜெயலலிதா வருமானத்துக்கு அதிகமாகச் சொத்து சேர்த்த வழக்கு குறித்து ஊழல், லஞ்ச ஒழிப்புத் துறை விசாரித்துக் கொண்டிருந்தபோது, 248 கோடியில் ஜெயலலிதா லண்டனில் இரண்டு ஹோட்டல்கள் வாங்கியதாக அவர்களுக்குத் தகவல் வந்தது. அந்தத் தகவல்களின் அடிப்படையில் செப்டம்பர் 2000-ம் ஆண்டு வழக்குப் பதிவு செய்யப்பட்டது. ஆனால், 1998லேயே அந்த ஹோட்டல்களை அதிக லாபத்துக்கு விற்றும் விட்டாராம் ஜெ. சொத்துக் குவிப்பு வழக்குடன் சேர்த்து இந்த வழக்கும் விசாரிக்கப்பட்டு வந்தது. 2001ல் ஜெ. மீண்டும் ஆட்சிக்கு வந்தபோது, இந்த வழக்குகளில் வதிலும், சில தடயங்களைப் பெறுவதிலும் யதார்த்தமான பிரச்னைகள் எழுந்தன. வழக்கு பலவீனமாக இருப்பது புரிந்தது. சொத்துக் குவிப்பு வழக்கோடு இதையும் சேர்த்து விசாரித்தால், இரண்டிலுமே ஜெ. தப்பிக்கும் வாய்ப்பு இருக்கும் என்று கருதியதால், தனித்தனியாக விசாரிக்க வேண்டும் என்று உச்சநீதிமன்றத்துக்



# வழக்கு வாபஸ் ஏன்?

நியாயம் கிடைக்காது என்று கழகப் பொதுச் செயலாளர் அன்பழகன், 'வழக்குகளை வெளி மாநிலத்துக்கு மாற்ற வேண்டும்' என்று உச்சநீதிமன்றத்தில் மனு கொடுத்தார். அதன் அடிப்படையில் கர்நாடகத்தில் சிறப்பு நீதிமன்றம் அமைக்கப்பட்டு இரண்டு வழக்குகளும் சேர்த்து அங்கு விசாரிக்கப்பட்டன. இந்த நிலையில் ஹோட்டல் வழக்கில் சாட்சிகளான வெளி நாட்டுக்காரர்களை இங்கு கொண்டு வருகுப் போனது தமிழக அரசு. பின்னர் யோசித்தபோது, ஹோட்டல் வழக்கை வாபஸ் பெற்று சொத்துக் குவிப்பு வழக்கில் தீவிரக் கவனம் செலுத்த வேண்டும் என்ற முடிவு செய்யப்பட்டது. அந்த அடிப்படையில் வழக்கை வாபஸ் பெற்றது தமிழக அரசு'' என்றார் ஆர்.எஸ். பாரதி.



✱ ஆர்.எஸ்.பாரதி

ஏற்கெனவே கொடைக்கானல் ஹோட்டல் வழக்கில் விடுதலை செய்யப்பட்ட ஜெ.வுக்கு எதிராக மேல் முறையீடு செய்யவில்லை தமிழக அரசு. இந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட செல்வகணபதி தற்போது தி.மு.க.வில் இருப்பதுதான் அப்பீல் செய்யாததற்குக் காரணம் என்கிறார்கள்.

– கௌசி



-கள் எப்படியிருந்தபோதும் துணிந்து களத்தில் இறங்கியதற்காகவே அவரைப் பாராட்ட வேண்டும்.

ஜனநாயகம் கைகொடுக்கிறதோ இல்லையோ காங்கிரஸ் நிச்சயம் 'கை'கொடுக்கும்.

இந்தத் தேர்தலின் ஹாட் டாபிக், வருண் காந்தியின் வரம்பு மீறிய பேச்சு. இனி வரும் காலங்களில் ராகுலுக்குப் போட்டியாக வந்துவிடுவார் என்ற பயத்தில் காங்கிரஸ் அவரை வில்லனாக சித்திரித்துவிட்டது.

இவர்களின் குடும்பச்சண்டையில் திடுதிப்பென்று நுழைந்த லாலு, கடைசியில் காமெடியனாகிவிட்டார்.

எப்படியோ, சர்ச்சைகளின் உபயத்தில்

# வைகோவுக்கு

* சர்ச்சில்

தேர்தல் வந்துவிட்டாலே சுவாரஸ்யமான சங்கதிகளுக்குப் பஞ்சம் இல்லை. இந்தத் தேர்தலும் அதற்கு விதிவிலக்கல்ல.

இந்தியாவின் சார்பில் ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச்செயலாளர் பதவிக்குப் போட்டியிட விரும்பிய சசி தரூர் ஆதரவு கிடைக்காமல் ஆசையைக் கைவிட்டார்.

இப்போது அவருக்கு மத்திய அமைச்சராகும் ஆசை வந்திருக்கிறது. திருவனந்தபுரம் தொகுதியில் போட்டியிட்டு தேர்தல் முடிவுக்காகக் காத்திருக்கிறார்.




இதற்கிடையில் தேசிய கீதத்தை அவமதித்ததாக அவர்மீது வழக்கு வேறு. தேர்தலுக்கும் சசிக்கும் ராசியில்லை போல...

தேர்தல் முடிவு

வருண் இப்போது நட்சத்திரப் பேச்சாளராகிவிட்டார். மொத்தத்தில் இந்தத் தேர்தலில், சசி ஹீரோ, வருண் வில்லன், லாலு காமெடியன்.

தமிழக அரசியலில் யார் ஹீரோ? யார் வில்லன்?

இந்தியா முழுவதும் நடைபெறும் ஐந்துகட்டத் தேர்தல் பற்றிய விரிவான விவரங்களை www.indian-elections.com என்ற இணைய தளம் வழங்குகிறது.

**www.arasiyaltalk.com**

ஆட்கள் தேவை

நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிடுவதற்கு 40 பேர் தேவை

## 'வலை'யோடு விளையாடு

சாப்பாடு, தங்குமிடம் இலவசம்
அணுக வேண்டிய முகவரி :
விஜய டி.ராஜேந்தர் எம்.ஏ.,
தலைவர், துணைத்தலைவர்,
பொருளாளர், செயலாளர்,
கொள்கைப் பரப்புச் செயலாளர்
லட்சிய தி.மு.க.,
கோடம்பாக்கம், சென்னை-17.
www.arasiyaltalk.com

www.arasiyalkalam.com

அரசியல்களம் என்ற இந்த இணைய தளத்தில் அரசியல் தலைவர் களைப்பற்றிய விவரங்கள், புகைப்படங்கள், நடப்பு நிகழ்வுகள், விமர்சனக் கட்டுரைகள், புத்தகங்கள், போஸ்டர்கள் என்று வகைபிரித்து வழங்கியிருக்கிறார்கள்.



# பாஸ்மார்க்!

* 'பாஸ்மார்க்' பேச்சு

அரசியல்தலைவர்களுக்கென்று ஸ்பெஷல் டிப்ஸ்களைக்கூட கொடுத்திருக்கிறார்கள். உதாரணத்துக்கு,

- தலைக்கு டை அடிப்பதையும் கலரிங் செய்வதையும் தவிர்த்துவிடுங்கள்... (விஜயகாந்த் கவனிப்பாராக)
- மேடைகளில் பேசும்போது தயக்கமின்றி உங்களின் உணர்ச்சி வேகத்தைக் காட்டுங்கள். வின்சென்ட் சர்ச்சில், அடால்ப் ஹிட்லர் என்று எல்லாத் தலைவர்களும் உணர்ச்சிகரமாகப் பேசித்தான் மக்களின் ஆதரவைப் பெற்றார்கள். (வை.கோவுக்கு பாஸ்மார்க்) அதேநேரத்தில் யாரையும் அளவுக்கு அதிகமாகத் திட்டித் தீர்த்து விடவும் கூடாது. (சகலருக்கும் இது பொருந்தும்)
- எப்போதும் மக்கள் தொடர்பில் தனிக் கவனம் செலுத்த வேண்டும்.
- வாக்காளர்களும் இந்த டிப்ஸ்களைப் படிக்கலாம். குறைந்த பட்சம் நமது தலைவர்கள் மக்களைக் கவர்வதற்கு என்னென்ன டெக்னிக்குகளைப் பின்பற்றுகிறார்கள் என்று தெரிந்து கொள்ளலாமே...



* ஆள் தேடல்



மொத்தம் ஆறு பாடல்கள்.

பெரும்பாலான காட்சிகளை தமது தோளில் கேமிராவை வைத்தே படம் பிடித்துள்ளார் ஒளிப்பதிவாளர் பால பரணி. அதே தோளில் அடிபட்டு கட்டுப் போட்ட கையோடு மூன்று பாடல்களை டி.-இ (டிஜிட்டல் இமேஜ்) செய்து கச்சிதமாக முடித்தும் கொடுத்து படக் குழுவிடம் பாராட்டைப் பெற்றுள்ளார் பரணி.

உலகத் திரைப்பட வரலாற்றில் பத்து இயக்குநர்கள் ஒன்றாகச் சேர்ந்து நடிக்கும் படம், தமிழில் 'மாயாண்டி குடும்பத்தார்' என்கிற பெயரில் தயாராகி வருகிறது. இதனை யுனைடட் ஆர்ட்ஸ் என்கிற நிறுவனம் தயாரிக்க, இயக்குநர் ராசு மதுரவன் இயக்குகிறார்.

இசை சபேஷ் - முரளி. படத்தில்

தாம் நடித்து இயக்கும் படத்தைத் தள்ளி வைத்துவிட்டு முழுப் படப் பிடிப்பிலும் 'பரமன்' கதாபாத்திரத்தில்

# "கதைகளைத் தேடுங்கள்;



## நாளை நமதே - விமர்சனம்...

அனாதைக் குழந்தைகளைத் தத்தெடுத்து வளர்க்கிறார் மணிவண்ணன். இவரோடு ஒட்டிக்கொண்டிருக்கும் ஆசிஷ் வித்யார்த்தி அனாதைக் குழந்தை ஒன்றுக்குப் பயிற்சி கொடுத்து, பங்களாக்களில் கொள்ளையடிக்கிறார். ஒருமுறை கொலையும் செய்துவிட, இதைப் பார்த்த குழந்தை மற்ற குழந்தைகளிடம் உண்மையைச் சொல்லிவிடுகிறது. தான் மாட்டிக் கொள்வோம் என்கிற பயத்தில் ஆசிஷ் அந்தக் குழந்தைகளைத் தீயிட்டுக் கொல்கிறார். அதிலிருந்து தப்பிய குழந்தை, ஆசிஷையும் அவர்களது கூட்டாளிகளையும் எப்படிப் பழி வாங்குகிறது என்பதே படத்தின் மீதிக்கதை.

கதை நாயகனாக வலம் வந்திருக்கிறார் தருண் கோபி. 'சிக்ஸ்பேக்' கனவுகளை யெல்லாம் தூக்கி எறிந்துவிட்டு சிங்கிள் பேக்காக உடலை மாற்றி நடித்திருக்கிறார். இயக்குநர் மணிவண்ணனுக்கு முக்கிய கதாபாத்திரமாம்!

மயில் மாமா, டெர்ரர் நந்தா பெரியசாமி, அல் கொய்தா ஆக்டிங் ரவிமரியா என ஆளாளுக்கு செல்லப் பெயர் வைத்துக் கொண்டு யூனிட்டே சந்தோஷமாக, எவ்வித ஈகோவுமின்றி படத்தை முடித்துக் கொடுத் திருக்கிறார்களாம் பத்து இயக்குநர்களும்.

சீன் பேப்பர் எதுவும் கையில் வைத்துக் கொள்ளாமலேயே படப்பிடிப்பை நடத்தி யிருக்கிறார் இயக்குநர். மாயாண்டி குடும்பத்தாரில் 'மாயாண்டி' வேறு யாருமில்லை! 'சீமானே'தான்! ●



# விருது நிச்சயம்!"

ராமுவின் கதாபாத்திரத்தில் வரும் பிரதீபன் நடிப்பில் விறுவிறு. ராஜன் பி.தேவை பிள்ளையார் சிலைக்குள் வைத்துக் கடத்துவதும், ஆசிஷைக் கொலை செய்து பத்திரப்படுத்தி வைத்திருப்பதாக இருக்கும் காட்சி களிலும் தியேட்டரில் கலகல...

கொஞ்ச நேரமே கலெக்டர் வேடத் தில் வந்து போனாலும் கார்த்திகாவின் நடிப்பில் கம்பீரம்.

'புடி... புடி... புடி...' பாடல் பரவா யில்லை. ராஜு, தனுஷாவின் காதல் மனத்தில் ஒட்டாமல் போகிறது. படத்தின் பின்பகுதியில் ஏற்படும் நீண்ட இழுவையைக் குறைத்திருக்க லாம். எம்.எஸ்.பாஸ்கர், சார்லியின் காமெடி கடி. நாளை நமதே - நம்பிக்கை!

கடந்த ஆண்டு வெளியாகி வெற்றி பெற்ற 'அபியும் நானும்', மற்றும் 'பூ' படத்துக்கு த.மு.எ.ச. விருதளித்தது. இந்த விழாவின் சில துளிகள்...

''வாழ்க்கையிலிருந்து ரத்தமும், சதையுமாக எடுக்கப்பட்ட கதை படமாக்கியிருக்கிறார்கள். சமரசங்களுக்கு உட்படாமல், இயக்குநர்களுக்குச் சுதந்திரம் கொடுத்த தயாரிப்பாளர்களுக்கு நான் தலை வணங்குகிறேன்'' என்றார் பாலுமகேந்திரா.

''இயக்குநர்களான நீங்கள் கதை எழுதாதீர்கள். கதையைத் தேர்ந்தெடுங்கள். அல்லது தேடுங்கள். நிச்சயம் வருடத்துக்கு இரண்டு சிறந்த படங்களை நீங்கள் தரமுடியும்'' என்றார் 'மோசர் பெர்' தனஞ்செயன்.

**- கிராபியென் ப்ளாக்**



‘தேய்ந்து போன மான்செஸ்டர்’ கட்டுரையைப் படிக்கும்போது பஞ்சத்தில் அடிபட்ட நிலையை உணர முடிகிறது; மத்திய மாநில அரசுகள் மீண்டும் அதன் பெருமையை நிலைநாட்ட முயற்சிக்க வேண்டும்.

- கே.ராஜகோபால், சென்னை - 24

கோவையாய் செய்தியை எடுத்து வைத்து...கோவை மாண்பை மண்வாசனையோடு வழங்கிய உம்மை - இவ் வட்டமேஜை மூலம் வாழ்த்துகிறோம். தடம்மாறாமல் என்றுமே தரம் காப்பதுதானே... கல்கியின் ஸ்பெஷல்!

- கோவை.நா.கி.பிரசாத்

# தொடரட்டும்

வேட்டைக்காரன் புதூர் முத்து மாணிக்கத்தின் தம்பி மகனும் என் மகனும் நெருங்கிய தோழர்கள். எனினும் முத்துமாணிக்கம் பற்றிய பல புதிய விவரங்களை மரபின்மைந்தன் முத்தையா மூலம் அறிய முடிகிறது.

- எஸ்.ஜானகி,
உடுமலைப்பேட்டை

‘வோட்டுகளில் அ.தி.மு.க; கூட்டணியில் தி.மு.க.; கொள்கையில் தே.மு.தி.க.’ என்பதோடு ‘பதில்களில் தராசு’ என்று சொல்லும் வண்ணம், தராசு பதில்களில் கருத்து பலம் பெருகிக் கொண்டே வருகின்றது!

- கே.கஸ்தூரி, வேலூர்

ஜப்பான் போய் கலக்கிவிட்டு வந்த பாஸ்கி ‘எஸ்கலேட்டர் தத்துவம்’ சொல்லி, ‘கல்கி’ வாசகர்களையும் கலகலக்க வைத்து விட்டார்.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

‘வாழ்க்கை என்பது யாத்திரையா? போராட்டமா? வேள்வியா?’ என்பதற்கு, நடந்தால் யாத்திரை, ஓடினால் போராட்டம், அமைதியாய் அமர்ந்தால் வேள்வி என்று கூறிய கிரேஸியின் பதில் சுவாரஸ்

யம்!

- இந்திரன், நாகர்கோவில்

**க**லைஞரின் குழப்பத்தை மிகத் தெளிவாக விளக்கியிருந்தது இந்த வாரத் தலையங்கம்!

-டி.பச்சமுத்து, கிருஷ்ணகிரி

**கா**ங்கிரஸைத் தோற்கடிப்பதே லட்சியம் என்று முழங்கிவிட்டு, இன்று அக்கட்சியுடன் கூட்டணி வைத்துள்ள திருமாவளவனின் பேட்டி கலகலப்பு.

- என். சண்முகம், திருவண்ணாமலை

**தெ**ய்வத் தொண்டென்பது காரிய பரிபாலனத்துள் அடக்கமானது, வெறும் உதட்டளவு அர்ச்சனை ஸ்லோகம் உச்சரிப்பில் இல்லையென சங்கராச்சார்ய சுவாமிகள் அடையாளம் காட்டியிருப்பது ஆத்திகர்கட்கு நல்வழி புகட்டும் அமுத அருள் வாக்கு!

-ச.ஆ.கேசவன், இனாம் மணியாச்சி

'**நி**னைவோ ஒரு பறவை' சிறுகதையில் இன்றைய ஒரு இளைஞனை யதார்த்தத்துக்குத் திருப்ப, ஒரு பாட்டியின் கடந்தகால நிகழ்வுகள் பயன்பட்டிருக்கும் விதமாகப் புனைந்திருப்பது சபாஷ்!

- வானவில் மூர்த்தி, கடலூர்

**சி**று துளியைப் பெரு வெள்ளமாக மாற்றி வரலாறு படைத்த வனிதா மோகனை வாழ்த்தாத கொங்கு மண்டல வாசிகளே கிடையாது. சென்னை கூவமும் சுத்திகரிக்கப்படட்டும்.

- சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

# தூரிகை விருந்து...

**வெ**ள்ளியங்கிரி வீதியிலே- திருக்கோயில் புனிதப் பயணம் பற்றிய செய்திகள் 'சென்று காண வேண்டும்' என்ற ஆவலை உண்டாக்கின!

- வள்ளியூர் ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்

**ப்**ளாக் அண்ட் வொயிட் கதைகள் எல்லாமே கலர்புல். அதிலும் இந்த வாரம் வெளியிட்ட 'பரதன் தந்த பரிசு' கதை, இராமாயணத்தில் ஓர் உணர்ச்சிமயமான கட்டத்தை விவரித்தது அருமை!

- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

**த**ம்முடைய ஒரு வாக்கைப் பதிவு செய்வதற்காக தென்னாப்பிரிக்காவிலிருந்து ப்ரீத்தி ஜிந்தா வருகிறாரா? சபாஷ் ப்ரீத்தி ஜிந்தா!

- எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

'**ஈ**ஷா ரசிகர் மன்றம் அல்ல' என்று கூறும் சத்குரு ஜக்கி வாசுதேவின் விளக்கம் மனத்தை பேஷா(க) ஈர்த்து விட்டது. கோவை மாவட்டச் சிறப்பிதழுக்கு ரத்தின மாக மின்னியது அவரது பேட்டி!

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

**அறிவிப்பு**

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2009 - விவரங்களுக்குச் சென்ற வாரக் கல்கி இதழைப் பார்க்கவும். அல்லது அடுத்த வாரம் வரை காத்திருக்கவும்.**

**(ஆர்.)**

நாடக விமர்சனம்

# பௌர்ணமியா? 'பால' சந்திரனா?

'நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் மேடையில் உங்கள் முன்னால்' என்ற அறிவிப்போடு தொடங்கும்போதே, பௌர்ணமியாக ஜொலிக்கப் போகிறார் என்ற எதிர்பார்ப்போடு காத்திருக்கும் ரசிகர்களுக்கு, பௌர்ணமியாக அல்ல -'பாலசந்திர'னாககூட அவர் ஜொலிக்கவில்லை என்பது மிகப் பெரிய ஏமாற்றமே! தம்மையும், தம் திறமையையும் நம்பி மேடை ஏறிய அந்த நாளைய பாலசந்தர் எங்கே? தன்னால் அறிமுகம் செய்யப்பட்டு மேடையிலும் (சின்னத்திரை) திரைவானிலும் ஒளி வீசிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்களை நம்பி மேடைக்கு வந்திருக்கும் இன்றைய பாலசந்தர் எங்கே? ஒரே செட்டிலே நாடகத்தைக் கொண்டு செல்வதில் மட்டும் அன்றைய பாலசந்தர் (அந்தப் பழைய உத்தியில் மட்டுமே) நம் கண் முன்னால் நிற்கிறார். மற்றபடி எந்தப் புதுமையும் காணோம். இந்த இடத்தில் ஒன்றைக் குறிப்பிட்டே ஆக வேண்டும். இந்த நாடகத்தின் உயிர் நாடியாக ஜொலிப்பது செட்டும் ஒளி அமைப்புமே.



'பாகிஸ்தான் தீவிரவாதியை விடுவித்தால்தான், அப்பாவி இந்தியனை விடுவிப்போம்' என்கின்ற இரண்டு வரி கதைக்கு - அரைத்த மாவையே அரைக்கும் கதைக்கு - இரண்டு மணி நேரமும், ஒரு பாலசந்தரும் தேவையா? ஸ்ரீவத்சனுடைய வசனங்கள் ஆங்கில நெடி வீசினாலும், இறுதிக் கட்டத்திலே நிமிர்ந்து நிற்கின்றன. நடிப்பில் அனைவரும் இயல்பாகத் தோன்றுகிறார்கள்.

இதில் நான்கு பெண் கதாபாத்திரங்கள். தேவைதானா என்று தெரியவில்லை! ரேணுகாவிடம் சில இடங்களில் ஓவர் ஆக்ஷன் தெரிகிறது. காவ்யாவின் திறமையை வேறுவிதமாகப் பயன்படுத்தி இருக்கலாமே?

தம்பியாக நடித்தவர் மேடைக்குப் புதுமுகமோ? மனத்தில் நிற்கிறார். மொத்தத்தில் டெம்போவே சிறிதும் இல்லாத இந்த நாடகம் மேடை ஏற, பாலசந்தர் என்ற பெருங்காய டப்பா தேவையில்லை.

– ஏ.ஆர்.பார்த்தசாரதி

